குருபாதம்

# ஞானசம்பந்தம்



தருமையாதீனத் திங்கள் இதழ்



[மலர் 43] ருத்ரோத்காரி ஆண்டு கார்த்திகைத் திங்கள் 10-12-83 [இதழ்]

தில்லையம்பலத்தில் 

பதஞ்சலி வியாக்கிரபாதர் பக்திக்கு நடராஜப்பெருமான் திருநடம்புரிதல்

தருமையாதீனக் குருமுதல்வர்



ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள்


உ

குருபாதம்

# "ஞானசம்பந்தம்"

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 43 ‖ 10-12-83 ‖ இதழ் 1


## உட்பொருள்



உ

குருபாதம்

## ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருள்வாக்கு

---

ஆதாரம் இந்நிலத் துன்னையல்
காருளரோ [லால்எனக்
மீதான மான வெளியினைக்
விரைந்துடன்வந்(து) [காட்ட
ஓதாமல் ஓதி எனைவச மாக்கினை
உள்ளொளியாம்
நாதா அருள்செய் மதுரா புரிச்
நாயகனே. [சொக்க

— சொக்கநாதக் கலித்துறை 2


ஆசிரியர் :-

வித்துவான்

இராமலிங்கத் தம்பிரான் சுவாமிகள்

துணையாசிரியர் :-

மகாவித்துவான்

சி. அருணைவடிவேல் முதலியார்

உ

குருபாதம்

தருமையாதீனம்

# "ஞானசம்பந்தம்" திங்கள் இதழ்

## சந்தாதாரர்களுக்கு

# ஓர் அறிவிப்பு



தருமையாதீனத்திலிருந்து திங்கள் தோறும் மலர்ந்து செந்தமிழ் மணமும் சிவமணமும் பரப்பி, சிவஞானத்தேன் நிறைத்து, கற்போர் கருத்தைக் கவர்ந்துவரும் "ஞான சம்பந்தம்" நாற்பத்திரண்டு ஆண்டுகள் நிறைவு பெறு கின்றது.

சந்தாதாரர்கள் தொடர்ந்து ஆண்டுக் கட்டணம் செலுத்தியும், புதிய சந்தாதாரர்களாகச் சேரவிரும்புவோர் கீழ்க்காணும் முகவரிக்கு ஆண்டுக் கட்டணம் அனுப்பி யும்' "ஞானசம்பந்தம்" இதழைப் பெற்றுக் கற்றுப் பய னுறுவார்களாக.

வேலை மிகுதியினாலோ அல்லது மறதியினாலோ ஆண்டுச் சந்தா செலுத்துவதில் தடை ஏற்படலாம். தடை யில்லாமல் "ஞானசம்பந்தம்" பெற வாய்ப்பு அளிக்கும் முறையில் ஆயுள் சந்தா ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. **ஆயுள் சந்தா** அறிவிப்புச்செய்த 19—2—72 முதல் இன்று வரையில் 998 அன்பர்களுக்கு மேலாக ஆயுள் சந்தா செலுத்தி ஆயுள் உறுப்பினராகி உள்ளனர்.

ஆயுள் சந்தா செலுத்தினால் அவர்களது வாரிசுகளும் "ஞானசம்பந்தம்" பெற வசதிசெய்துதரப்படும். மேலும் தமது ஆயுள் சந்தாவை மற்றவர்களுக்கோ கல்வி, அற நிறுவனங்களுக்கோ மாற்றிக்கொடுக்க விரும்பினால் அதற் குரிய ஏற்பாடுகளும் செய்துதரப்படும்.

இவ்வரிய வாய்ப்பைப் பயன்படுத்தி ஆயுள் சந்தா தாரர்களாகச் சேர்ந்து "ஞானசம்பந்தம்" பெற்றுப் பயனடையுமாறு கேட்டுக்கொள்கிறோம். இன்றே உங்களை ஆயுள் உறுப்பினராக்கிக்கொள்ளுங்கள்.

ஆண்டுச் சந்தா செலுத்துவோர் 1984 ஜனவரி 31 தேதிக்குள், சந்தாத் தொகை கிடைக்கச்செய்யவேண்டும் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

## சந்தா விபரம்

| | | | |
|---|---|---|---|
| ஆண்டுச் சந்தா (உள்நாடு) | ... | ரூ. | 12—00 |
| ஆண்டுச் சந்தா (சிலோன்) | ... | ரூ | 23—00 |
| ஆண்டுச் சந்தா (வெளிநாடு) | ... | ரூ. | 25—00 |
| ஆயுள் சந்தா (உள்நாடு) | ... | ரூ. | 125—00 |
| ஆயுள் சந்தா (வெளிநாடு) | ... | ரூ. | 250—00 |

## விளம்பரம்

| | | | |
|---|---|---|---|
| பின் அட்டை வெளிப்பக்கம் | 2 - கலர் | ரூ. | 300—00 |
| பின் அட்டை உட்பக்கம் | 1 - கலர் | ரூ. | 200—00 |
| இதழின் உட்பக்கம் | ,, | ரூ. | 100—00 |
| இதழின் உட்பக்கம் அரைப்பக்கம் | | ரூ. | 50—00 |

கட்டணம் அனுப்பவேண்டிய முகவரி :—

செயலாளர்,

ஞானசம்பந்தம் செயலகம்,
தருமபுரம், மயிலாடுதுறை – 609 001
தஞ்சை மாவட்டம்.

குறிப்பு:— ஆயுள் சந்தா தொகை அனுப்புவோர் "ஞானசம்பந்தம் திங்கள் இதழ்" என்கிற பெயருக்கு டிராப்ட் எடுத்து அனுப்பக் கேட்டுக்கொள்ளுகிறோம்.

உ

குருபாதம்

# ஞானசம்பந்தம்

மலர் 43 | ருத்ரோத்காரி-கார்த்திகை-10—12—83 | இதழ் 1

திருச்சிற்றம்பலம்

பொன்தயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த புன்சடை
பின்தயங்க ஆடுவாய்! பிஞ்ஞகா! பிறப்பிலீ!
கொன்றையம் முடியினய்! கூடலால வாயிலாய்!
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே.

— ஞானசம்பந்தர்.

திருச்சிற்றம்பலம்.

## நன்றே செய்க; அதனையும் இன்றே செய்க!

**வியப்பூட்டும் தகவல் :**

அறநிலையத்துறைக்குப் பொறுப்பு வகிக்கும் அமைச்சர் மாண்புமிகு ஆர். எம் வீரப்பன் அவர்கள் வியப்பூட்டும் தகவல் ஒன்றைப் புள்ளிவிபரங்களுடன் அண்மையில் வெளியிட்ட செய்தி தினமலரில் வெளியாகியுள்ளது. அதில் தஞ்சை மாவட்டத் திருக்கோயில்கள், இவற்றின் நஞ்சை – புஞ்சை நிலங்கள் இவற்றின் வருவாய், வரவேண்டிய குத்தகை பாக்கி போல்வன வெளியிடப்பெற்றுள்ளன. தஞ்சை மாவட்டத்தில் அறநிலையத்துறை, துணை ஆணையர் பொறுப்பில் 394 ஆலயங்களும், உதவி ஆணையர் பொறுப்பில் 4023 ஆலயங்களும், ஆகக் கூடுதல் 4417 ஆலயங்கள் உள்ளன. இவ்வாலயங்களுக்குச் சொந்தமாக நஞ்சை நிலம் 79, 947-44 ஏக்கர், புஞ்சை 47, 914-23 ஏக்கர், மானுவாரி 11, 582-57 ஏக்கர் ஆகக்கூடுதல் 1, 39, 444-24

ஏக்கர் நிலம் உள்ளது. இவற்றில் ஆலயங்கள் நேரடிச் சாகுபடி செய்யும் நிலங்கள் மிகமிகக் குறைவு. பெரும்பகுதி நிலங்கள் அவ்வப்பகுதியில் வாழும் விவசாயிகளிடமே பல்லாண்டுகளாகக் குத்தகைக்கு விடப் பெற்றுள்ளன.

## அரசின் நல்லெண்ணம் :

அமைச்சர் தரும் தகவல் அடிப்படையில், குத்தகைதாரர்களிடமிருந்து தஞ்சைமாவட்ட ஆலயங்களுக்கு வரவேண்டிய குத்தகை பாக்கி எட்டுலட்சத்து நாற்பத்தெட்டாயிரத்து நூற்று இருபத்தொன்பது குவிண்டால் ஆகும். (8,48,129 குவிண்டால்) இதன்மதிப்பு பதினொருகோடியேஎண்பத்தேழுலட்சத்துமுப்பத்தெட்டாயிரத்துப் பதினான்கு ரூபாய் (11, 87, 38 014 – 00 ரூபாய்) இதுதவிரப் பணமாக வரவேண்டியபாக்கி 76, 03, 176–27 ரூபாய் கூடுதல் பாக்கி 12, 63, 41, 190–00 ரூபாய் ஏறத்தாழ 13 கோடி ரூபாய் குத்தகைதாரர்களிடமிருந்து ஆலயங்களுக்கு வர வேண்டியுள்ளது. இத்தொகை நான்கில் மூன்றுபங்கு குத்தகை தாரர்கள் எடுத்துக்கொண்டது போக எஞ்சிய ஒரு பங்குதான் ஆலயங்களுக்குத் தரவேண்டியது. அந்நான்கில் ஒரு பங்கு குத்தகை நெல்லின் மதிப்பே மேற்சொன்ன 13 கோடியாகிறது. இந்த உரிய பாக்கிகளைப்பெற ஆலயங்களுக்கு உதவ அரசு விரும்புவதாகவும், ஆலயங்களுக்குச்சட்டபூர்வமாக இவற்றைப் பெற உதவும் வகையில் சட்டமியற்றப் போவதாகவும், இம் முயற்சிக்குச் சிலர் எதிர்ப்புத் தெரிவித்திருப்பது வருந்தத்தக்கது எனவும் அறநிலைய அமைச்சர் பேசியுள்ளார்.

## எதிர்பார்ப்பும் ஏமாற்றமும் :

அமைச்சர் அறிவிப்பின் கருத்து இதுதான். குத்தகை பாக்கிகளைப் பெற நீதிமன்ற நடவடிக்கை எடுக்க இயலாது தொடர்ந்து அரசு அவசரச்சட்டங்களைப் பிறப்பித்து வந்து உள்ளது. குத்தகைபாக்கிகள் எவ்வளவாயினும் அறநிலையங்கள் இச்சட்டத்தால் செயற்பட முடியாமலிருந்தன. அரசு, கோயில்களின் நலன் கருதியும், அங்குள்ள ஊழியர்களின் நிலை கருதியும் நீதிமன்றவாயிலாகக் குத்தகைபாக்கிகளை வருவித்துக் கொள்ள புதுசட்டவரைவு ஒன்றை, நடந்துமுடிந்த சட்ட மன்றக் கூட்டத்தொடரிலேயே கொண்டுவரப் போவதாக அறநிலைய அமைச்சர் அறிவித்திருந்தார். முதலமைச்சரின் நல்லெண்ணத்தோடு அறநிலைய அமைச்சர் ஆலயநிலங்களுக்கு விலக்களிக்கும் இம் மசோதாவைக் கொண்டுவந்து நிறைவேற்றுவார் என மக்களும், கோயில் ஊழியர்களும், கோயில்

வளர்ச்சியில் நாட்டமுடையோரும் பெரிதும் எதிர்பார்த்திருந் தனர். நடந்ததுவேறு சட்டசபை கூட்டத்தொடர் முடிந்தது. மசோதா பற்றிய பேச்சே இல்லை.

### ஏடுகள் கூறிய காரணங்கள் :

எதிர்க்கட்சிகள், கோயில் நிலங்களுக்கு விலக்களிக்கும் தமிழ்நாடு அரசின் முயற்சியைக் கடுமையாக எதிர்த்தன. ஆளும் அரசுக்குட்பட்ட அமைச்சர் சிலர் இம்முயற்சிக்கு வெளிப்படையான கண்டனம் தெரிவித்தனர். உத்தேச மசோதா நிறைவேற்றப்பட்டால் கோயில் நிலங்களைச் சாகுபடி செய்துவரும் ஏறத்தாழ ஒரு லட்சம் குத்தகைதாரர்களின் கோபத்துக்கு ஆளாக நேரிடும் என்ற அச்சத்தால், தேர்தல் நெருங்கும் நேரத்தில் அரசு இவர்களை விரோதித்துக்கொள்ள விரும்பவில்லை என்றும், இவற்றை எல்லாம் கருதியே அரசு உத்தேச மசோதாவை இக் கூட்டத்தொடரில் கொண்டுவர வில்லை என்றும் நடுநிலை நாளேடுகள் அரசின் திடீர்மாற்றத் திற்குக் காரணங்களைக் கண்டு எழுதின.

### ஆட்சிபற்றிய அச்சம் :

மக்கள் தலைவர்கள் அடுத்த தலைமுறையைப்பற்றிச் சிந்திப்பர். அரசியல்வாதிகள் அடுத்த தேர்தலைப்பற்றிச் சிந் திப்பர் என ஆங்கிலத்தில் ஒரு பழமொழி உண்டு. மக்களாட்சி முறையில் தேர்தல்கள் தவிர்க்க இயலாதன என்றாலும், தேர்தல் வெற்றியைவிட, சமூகநலனே மேலானது என்ற எண்ணம் நம்மவர்களிடம் மலர்தல்வேண்டும். இந்த உயர் பண்பு உருவாகாதவரை ஆட்சிபற்றிய அச்சம், நல்லவைகளைத் துணிந்து இயற்றும் ஆற்றலை, அரசியல்வாதிகளிடம் உருவாக் காது அழித்துவிடும். தஞ்சைமாவட்ட ஆலயங்களுக்குக் கிடைக்கவேண்டிய - உரிய - சட்டபூர்வமான வருவாய் தொடர்ந்து கிடைக்கவும், இக்கோயில்கள் கலை அழகோடு மிளிரவும், இங்கே பணியாற்றும் பல்லாயிரம் ஊழியர்களின் வாழ்வுவளம்பெறவும் வேண்டுமானால் தமிழக அரசு துணிவாக இம்மசோதாவைக் கொண்டுவந்திருக்கவேண்டும், இனியாவது கொண்டுவந்து நிறைவேற்றவேண்டும் என வேண்டுகோள் விடுக்கிறது ஞானசம்பந்தம்.

### எதிர்ப்புப் பொருட்டல்ல :

குடியாட்சித்தத்துவத்தில் எதிர்க்கட்சிகளின் பங்கு மகத் தானது. அரசோடு இணைந்து தாய்நாட்டின் பாரம்பரியப் பெருமைகளையும், மக்களின் பண்பாட்டுக்கூறுகளையும் வளர்க் கும் கடமை அவற்றுக்கு உண்டு. குடியாட்சித் தத்துவம்

முற்றுக உணரப்படாத நமதுநாட்டில், எதிர்க்கட்சிகள் வெறும் எதிரிக்கட்சிகளாகவே உள்ளன. அரசு எதைச்செய்தாலும் சாடுவது என்பது நல்லகுடியாட்சிப்பண்பாக இருக்க இயலாது. கோயில்களுக்கு விலக்களிக்கும் உத்தேச மசோதாவை எதிர்க்கும் எதிர்க்கட்சிகள்பல, கடவுள் மறுப்பு இயக்கத்தைச் சார்ந்தவை; கோயில்களே கூடாது என்ற கொள்கை உடையவை. வருவாய் வழியை அடைத்துவிட்டால் நாளாவட்டத்தில் பேணுவாரின்றி இவை தாமே அழியும் என்ற எண்ணம்கொண்டவை; இத்தகு எதிர்க்கட்சிகளின் எதிர்ப்புக்களை நல்லெண்ணம் கொண்ட தமிழக அரசு பொருட்படுத்தத் தேவையில்லை. பலநேரங்களில் எதிர்க்கட்சிகளின் எதிர்ப்புக்களை யெல்லாம் முறியடித்து வெற்றிகொண்ட இவ்வரசுக்கு உண்மையில் இவ் வெதிர்ப்பு ஒரு பொருட்டேயில்லை. அமைச்சரவையிலேயே இதனைச் சிலர் எதிர்ப்பது அரசுக்குப் பெருமைதருவதாகாது. இத்தகு எதிர்க்குரல்களை அடக்குவது அரசின் பொறுப்பு. இன்றேல் இதுவும் ஒருவகை உள்நோக்குடைய அரசின் ஏற்பாடுதானோ என மக்கள் ஐயுறுவர்.

## இடைத்தரகர்கள் ஏற்பாடு :

உத்தேசமசோதா, குத்தகைதாரர்களைப் பாதிக்கும் என அரசுகருத நியாயமே இல்லை. கோயில் நிலங்கள் இன்று உரிய குத்தகை தாரர்களிடம் பெரும்பாலும் இல்லை. கோயில் அனுமதி இன்றியே இவை மற்றவர்களுக்கு மாற்றி வழங்கப்பட்டுள்ளன. அமைச்சர் குறிப்பிடுவதுபோல் பெரும் இடைத்தரகர்கள் கையில் பினமி பெயரில் இவை உள்ளன. உத்தேச மசோதாவுக்கு எதிர்ப்புக்குரல் இத்தகு இடைத்தரகர்களாலேயே திட்டமிட்டு எழுப்பப்படுகின்றன. இவையாவும் அரசுக்குத் தெரியாதன அல்ல. தெரிந்திருந்தும் அரசு ஏன் சட்டத்தில் திருத்தம் செய்யாதிருக்கிறது என்பதுதான் கேள்வி? நேரடிக் குத்தகைதாரர் எந்தக்காரணத்தை முன்னிட்டும் கோயில் நிலத்தைப் பிறரிடம் அடமானம்வைக்கவோ, ஒத்திவைக்கவோ, செய்தால் குத்தகை உரிமையைப் பறிக்கப்படும் என்று ஒரு திருத்தம் கொணர்ந்தால் இந்த பினமி குத்தகைதாரர் இருப்பதற்கே இடமில்லாதுபோய்விடும். மேலும், குத்தகை, கோயில் நிலங்களைப் பொறுத்தவரைமிகக்குறைவு. இயற்கைக் காரணங்களால்பாதிக்கப்படும்போது இவற்றைக் குறைத்து வழங்கப் பலஏற்பாடுகள் உள்ளன. எனவே, குத்தகைதாரர்கள் பாதிக்கப்படுகிறார்கள் என்ற அச்சமே அரசுக்கு வேண்டுவதில்லை. மேலும், திருக்கோயில்களில் பணியாற்றும் பல்லாயிரம் ஊழியர்களும் இந்நாட்டின் குடிமக்களே. இவர்களின் நலத்தைப் பேணும்

பொறுப்பும் அரசுக்கு உண்டு. அறச்சொத்துக்களை 'குத்தகை' என்ற பெயரில் பெற்று, உரிய கால்பங்கையும் கோயில்களுக்கு வழங்காது, முழுவதையும் தாமே எடுத்துக்கொண்டு, கோயில் களின் ஒப்புதலைப்பெருது நிலங்களை மற்றவர்களிடம் பெரும் தொகை பெற்றுக்கொண்டு மாற்றிக் கொடுக்கும் 'குடிவாரதாரர்' களைவிட; கோயிலில் நேர்மையுடன் நாளும் உழைத்து ஊதியம் பெற மாட்டாது வருந்தும் அப்பாவி ஊழியர்கள்; அரசின் அனுதாபத்திற்குரியவராதல் வேண்டும்.

## இணக்கம் நிலவ உதவுக :

பெரும்பான்மை பலத்துடன், மக்கள் நலத்திட்டங்கள் பலவற்றைத் திட்டமிட்டுத் துணிச்சலாக நடத்தும் தமிழக முதல்வரும், அமைச்சர்களும், பாரம்பரியப் பெருமைமிக்க அறநிலையங்களை அதிலும் தஞ்சைமாவட்டக்கோயில்களை உரிய வாறு காக்க முன்வருவார்கள் என்றே தமிழக மக்கள் எதிர்பார்க் கிருர்கள். முன்னேர் விதைத்த அறங்களைச் சிதையாது போற்று தல் அரசின்கடன். நிலங்களை மீட்டுத்தரக் கோயில்கள் கோர வில்லை. சட்டபூர்வ வருவாய்க்கு உத்தரவாதம் வழங்குவது அரசின் கடமை. கோயில்களுக்கும் – குத்தகைதாரர்களுக்கும் இடையே இணக்கம்நிலவ அரசு, ஒவ்வோர் ஆண்டும் குத்தகை பாக்கிகளை நேர்செய்துகொள்ள உதவவேண்டும். ஒன்றே செய்க: அதுவும் நன்றேசெய்க: அதனையும் இன்றே செய்க:

திருக்கோயில் நிலங்களை வாரசாகுபடி செய்யும் விவசாயி கள் கோவில்களுக்குச் செலுத்தவேண்டிய பாக்கிகள் ஏராளம், கோடிக்கணக்கில் இருப்பதாக அறநிலைய அமைச்சர் அவர்கள் பேசியது என்று தினசரி நாளேடுகளில் அடிக்கடி வருகிறது. பரிகாரமாகச்சட்டத்திலிருந்து அறநிலையங்களுக்குவிலக்களிக்க உத்தேசம் என்றும் சொல்லிவருகிருர்கள். அதற்கு எதிர்ப்பும் கிளம்பி இருக்கிறது. எந்த சட்டத்தில் எப்படி விதிவிலக்கு அளிக்க உத்தேசம் என்பது வெளியாகவில்லை. பொதுப்படை யாகச் சொல்லி குழப்பம் விளைவித்துவருகிருர்கள்.

## சிபார்சு செய்யவேண்டிய இணங்கள் :

திருக்கோயில் நிலங்களுக்கு தனிச்சட்டம் உள்ளது(Public Taust Act 1962) அந்த சட்டப்படிக்கோவில் நிலங்கள் சாகுபடி தார்களிடம் வாரசாகுபடிக்கு ஒப்படைத்துவிட வேண்டும். வாரசாகுபடிதார்கள் சாகுபடி செய்து டி சட்டத்தில் விதிக்கப் பட்டிருக்கிறபடி வாரம், கண்டுமுதலில் நான்கில் ஒரு பங்கு ( 25% வாரம் ) கோவிலுக்குக் கொடுக்கவேண்டும். சாகுபடி

செய்பவர்கள் அவரவர்கள் வசமுள்ள நிலங்களுக்கு இந்த விகிதாச்சாரப்படி நெல் எவ்வளவு அளக்கவேண்டுமென்பது பேசிநிர்ணயஞ்செய்து அல்லது கோர்ட்டுமூலம்நிர்ணயம்செய்து விபாக்குத்தகைச்சிட்டு எழுதிக்கொடுக்கிறார்கள். இதுசாதாரண நிலையில் அமுலாக வேண்டியது. எந்தஆண்டிலாவது இயற்கை (வெள்ளம், வறட்சி) பாதிப்பினால் ஒப்புக்கொண்டிருக்கும் அளவு நெல் அளக்கமுடியாது என்று சாகுபடிதார் நினைத்தால் ரெவின்யூ கோர்ட்டில் மனுக்கொடுத்து கோர்ட்டு அதிகாரி முன்னிலையில் மகசூலை அறுவடை செய்து சட்டத்தில் கண்ட விகிதாச்சாரப்படி (25% சதவிகித நெல்லை) பங்கீடு செய்து கொடுக்கவேண்டுமென்று சாகுபடிதார் கேட்டு மனுச்செய்து கொள்ளலாம். கோர்ட்டு அதிகாரிகள், ஒரு பகுதியையோ, அல்லது, முழுவதையுமோ அறுவடைசெய்தோ, அல்லது. கோயில் அதிகாரிகளுடன் கலந்துபேசியோ, இதில் எதை சாகுபடிதாரர் விரும்புகின்றாரோ அல்வாறேசெய்து, உரியவாறு கணக்கை நேர்செய்து உதவுவர். Public Trust Act படி Normal விளைவு உள்ள காலத்தில் ஒப்புக்கொண்டபடி அளக்கலாம், பாதிப்புக்காலத்தில் கண்டதைப்பிரித்துக்கொள்ளலாம். எந்தநிலையிலும் சாகுபடிதார்கோவிலுக்குக்கொடுக்கவேண்டிய தாகப் பாக்கியே இந்தநிலையில் ஏற்படாது. அந்தந்த ஆண்டுக் கணக்கு நேர் ஆகிவிடும். இப்போதுள்ள சட்டத்தைமுறைப்படி அமுல் படுத்தாததால் பாக்கித் தங்குகிறது. இருதரப்பாரும் சங்கடப்படவேண்டியுள்ளது.

அரசுதலையிடு; அடிக்கடிசட்டங்கள்மூலமாகக்கோவில்கள் எடுக்கும் வசூல் நடவடிக்கைகளை தடை செய்து செயல்நடத்த முடியாது செய்துவிடுகின்றன. ரெவின்யூகோர்ட்டுகளைச் செயற்படச்செய்து சாகுபடிதார்கள் அதிகாரி முன்னிலையில் வாரம் பிரித்துக்கொள்ள வசதிசெய்துதரவேண்டுமென்று அரசு விதி. இந்த விதிகளைச் சரியாக நடைபெறச்செய்தாலே கோயில்களுக்கும் அறநிலையங்களுக்கும் கிடைக்கவேண்டிய குத்தகையோ, வாரமோ கிடைத்து வளம்பெறும். ஆண்டாண்டு தோறும் பாக்கிக்கே இடமில்லாதுபோய்விடும். குடிகளும் செழிக்கும். கோயில்களும் சிர்பெறும். இந்நற்செயலையாவது தமிழக அரசு இன்றே செய்ய முன்வருமாறு வேண்டுகிறது ஞானசம்பந்தம்.

வாழ்க குடிமக்கள்.

வளர்க அறநிலையங்கள்.

தழைக தமிழக அரசு.

உ

குருபாதம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம்

26 ஆவது குருமகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த

பரமாசாரிய சுவாமிகள்

மயிலாடுதுறையில் நடைபெற்ற

வேதநாயகம் பிள்ளையின் உருவச்சிலை திறப்பு விழாவில்

வழங்கியருளிய

# ஆசியுரை

7—12—83

" களித்துக் கலந்ததொர் காதற் கசிவோடு காவிரிவாய்க்
குளித்துத் தொழுதுமுன் னின்றஇப் பத்தரைக் கோதில் செந்தேன்
தெளித்துச் சுவையமு தூட்டி யமரர்கள் சூழிருப்ப
அளித்துப் பெருஞ் செல்வ மாக்குமை யாற னடித்தலமே "

**நிகழ்ச்சியல்ல ; படிப்பினை.**

இன்று கிறித்துவ மதத்தைச் சார்ந்து வாழ்ந்த விற்பன்னர் வேதநாயகம்பிள்ளையின் உருவச்சிலை திறப்புவிழா இங்கு நடைபெற்றுள்ளது. வேதநாயகம்பிள்ளை தொழிலால் முன்சீப்பாகவும், தமிழ் மொழிப்புலமை ஆற்றலால் சிறந்த கவிஞராகவும், பன்மொழிப் புலமையால் நல்ல மொழி பெயர்ப்பாளராகவும், எல்லா மதங்களையும் ஒப்ப மதிக்கும் திறத்தால் சான்ருண்மை மிக்க சமயப் பொறையாளராகவும் திகழ்ந்தவர்.' இவருக்கு விழாக்கொண்டாடுவதும் இவரின் உருவச் சிலையினைத் திறந்து வைத்து மகிழ்வதும் ஒரு நிகழ்ச்சி மட்டுமல்ல; இன்றைய கால நிலைக்குத் தேவையான படிப்பினையைத் தருவதுமாகும்.

1826 ல் தோன்றி 63 ஆண்டுகள் இந்நிலவுலகில் வாழ்ந்து மறைந்த இவரின் வாழ்வும் வாக்கும், இன்றைக்குள்ள நாட்டின் பட்டநிலைக்கும், வளங்குன்றியவாழ்விற்கும், பூசலும் போட்டியும் பொருமையும் நிறைந்துள்ள மனப் போக்கிற்கும், ஒருவரை ஒருவர் தாழ்த்த எண்ணும் தாழ்நிலைக்கும் பாடமாக அமைந்து விளங்குவன.

## ஆதீனங்களுடன் தொடர்பு :

இவர் கிறித்துவ சமயத்தைச் சார்ந்தவராயினும் பிறசமயங் களின் மீது குறிப்பாகச் சைவாதீனங்களின் மீது மிகுந்த ஈடு பாடும் மதிப்பும் கொண்டு வாழ்ந்து வந்தார். திருவாவடுதுறை ஆதீனத்தில் பதினெருவது குருமூர்த்திகளாக எழுந்தருளியிருந்த மேலகரம் சுப்பிரமணிய தேசிக பாமாசாரிய சுவாமிகளிடத்தில் மிக நெருங்கிய தொடர்பு கொண்டு அடிக்கடி அவர்களைச் சென்று கண்டு அளவளாவி வரும் பழக்கம் உடையவராய் இருந்தார். ஒருமுறை அங்ஙனம் சென்று கண்டு திரும்பியபிறகு மாயூரத்திலிருந்து ஒரு சீட்டுக்கவி எழுதி அனுப்பினர். அதில் நான் இங்கு வந்து சேர்ந்தேன்; ஆனல் என்னுள்ளம் வந்து சேரவில்லை; அதனை இங்கு அனுப்புவீரே என்று எழுதி அனுப்பினர்.

“ சூர்வந்து வணங்கும் மேன்மைச் சுப்பிர மணியத் தேவே!
நேர்வந்து நின்னைக் கண்டு நேற்றிராத் திரியே மீண்(டு)என்
ஊர்வந்து சேர்ந்தேன் என்றன்உளம்வந்து சேரக்காணேன்
ஆர்வந்து சொலினும் கேளேன் அதனையிங் கனுப்புவாயே ”

என்னும் இப்பாடலில், சுப்பிரமணிய தேசிகர் என்னும் பெயரு டன் விளங்கியிருந்த அவர்களை முருகனுக விளித்து, “ சூர்வந்து வணங்கும் மேன்மைச் சுப்பிரமணிய தேவே ” என்று எழுதி யிருக்கும் திறம் நினைந்தின்புறுதற்குரியது. இதனுல் அவரின் தமிழ்ப்பற்றும், பிறசமயத்திலுள்ள புராணக் கருத்துக்களை மதித்துப் போற்றும் பான்மையும் சைவாதீனங்களின் மீது கொண்ட பக்தியும் விளங்குகின்றன. மேலும் ‘ சர்வசமயக் கீர்த்தனை ’ என்னும் நூலொன்றையும் சமயப் பொது நோக்கில் இவர் இயற்றியுள்ளார்.

## சமயங்களின் பொதுக் கூட்டமைப்பு :

இத்தகைய சமயப் பொறையுடன் விளங்கிய பெருந்தகை யாளரின் விழாவைக் கொண்டாடும் இன்று இங்குச்சில சிந்தனைகளை மேற்கொள்வது பொருத்தமாக இருக்கும்.

கடவுள் நம்பிக்கை கொண்ட சமயங்கள் ஒன்ருேடு ஒன்று பூசலிட்டுத் தாழ்ந்து போவதைத் தவிர்த்து, எல்லாச்சமயங்க ளும் தமது சமயக்கொள்கைகளை விட்டுக் கொடுக்காமல் அவற்றில் அழுத்தமாக இருந்துகொண்டு, அதேநேரத்தில் வேற்றுமையில் ஒற்றுமை என்னும் நிலையில் ஒன்ருய்நின்று

மக்கட் சமுதாயத்திற்குப் பொறுமையுடன் பாடுபட வேண்டியது இக்கால நிலையில் மிகமிக அவசியமாகும். அரசியல்நிலையில் கூட்டுச்சேரா நாடுகள், இணைந்துநின்று தமக்குள் ஓர் ஒற்றுமையும் பாதுகாப்பும் கொண்டு வளர்வது போல, ஆன்மீகநிலையில் உலக அள்வில் எல்லாச் சமயங்களும் இணைந்து தமக்குள் ஓர் இணக்கம்கொள்வதும், எந்த நேரத்தில் எந்தச் சமயத்திற்கு ஊறு ஏற்பட்டாலும் அனைத்தும் ஒன்ருய் நின்றுஅதனைக்களைந்து பாதுகாக்கவேண்டியதும்இன்றையநிலையில் அவசியமானதும், மிகமிக அவசரமானதும் ஆகும். 'காமன் வெல்த்' மாநாடு போன்று, ஆன்மீக நிலையில் ஒருங்கிணைந்த அமைப்பின் கீழ், நலம்தேடும் நோக்கில் அமையும் மாநாடுகள் ஈராண்டிற்கு ஒருமுறை அல்லது மூன்ருண்டுக்கு ஒருமுறை சமயங்களின் பொதுக்கூட்டமைப்பு நடத்துதல் நன்மையைத் தரும். இத்தகைய நிலையில் இன்று ஒன்றுசேராத்தவறினல் அறிவு முதிர்ச்சியும் மனவளர்ச்சியும் பெற்றிருந்தும், இந்த 20 ம் நூற்ருண்டில் வாழத் தெரியாதவர்களாக மாறும்நிலை வரும். 'வாழ்கின்ருய் வாழாத நெஞ்சமே' என்று மணிவாசகர் கூறுவது போன்று வாழ்ந்தும் வாழாத நிலைக்கு ஆளாகக் கூடாது. வாழ்வு எது? தாழ்வு எது? என்று அனைவரும் புரிந்து கொண்டு, தாழ்வு நோக்கிச் செல்வதைத் தவிர்த்து வாழ்வு நோக்கி வளரத் தனி மனிதனும் சமுதாயமும் எண்ணிச் செயல்பட வேண்டியகாலம் இது. இதற்கு வழிகாட்டும் பொறுப்பு சமயத் தலைவர்கட்கு உண்டு என்பதை நினைவு கூர்வோமாக.

எத்துணைப் பொருள் வளமும், படைபலமும் இருந்தாலும் யாரும் யாரையும் அடிமைப்படுத்த இயலாது என்பதை உளம் கொண்டு, அதுபோன்றே எந்தச் சமயமும் பிற சமயத்தை அழித்துவிட முடியாது என்பதையும் எண்ணி எல்லாச் சமயங்களும் ஒன்ருய் இணைந்து செயற்பட்டால் நலம் விளையும். வேதநாயகம் பிள்ளை அவர்களின் விழாவில், இத்தகைய உலகளாவிய நிலையில் சமயங்களின் பொதுக் கூட்டமைப்புத் தோன்றவேண்டும் என்னும் சிந்தனையைச்சிந்திப்பது பொருத்தமானதேயாகும்.

### பெண்களின் பணிபற்றிய சிந்தனை :

மற்றுமொன்றையும் இங்குச் சிந்தித்தல் அவசியம். அவர், 'பெண்மதிமாலை' என்னும் நூலையும் பெண்களுக்கு அறிவு புகட்டும் வகையில் பாடியுள்ளார். பெண்கள் கல்வி அறிவு பெற்று வளரவேண்டும் என்று காந்தி அடிகள், திரு. வி. க., பாரதி போன்ருேர் பேசியும் எழுதியும் உள்ளனர். பெண்கள்

கல்விகற்று, அறிவுத்தெளிவுபெற்று வாழவேண்டும் என்பதில் யாருக்கும் கருத்துவேறுபாடு இருக்க இயலாது. ஆனால் பெண்கள் பட்டங்கள் பெற்று அறிவு பெறுவதோடு மட்டுமில்லாது, வேலைவாய்ப்பினைத்தேடிச்சென்று பல்வேறு அலுவலகங்களில் பணிபுரியும்நிலைபற்றி இன்னுமொரு முறை ஆழமாகச் சிந்தித்தல் இன்றைய நிலையில் அவசியமாகும்.

இப்பொழுதுள்ள போப்பாண்டவர்கூடப் பெண்கள் வேலை பார்க்க வெளியில் செல்வது நல்லதல்ல என்று கூறியதாகச் சமீபத்தில் ஒரு பத்திரிகையில் படித்தது நினைவுக்கு வருகிறது.

சில ஆண்டுகளுக்குமுன்பு திருச்சியில் நடைபெற்ற கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்களின் 70-வது பிறந்தநாள்விழாவிற்குச் சென்றிருந்த பொழுது அங்கு வந்திருந்த விஞ்ஞானி G. D. நாயுடு அவர்கள் கூறிய கருத்தும் இதற்கு ஒத்திருந்தது. அவர் பலருடன் உரையாடிக் கொண்டிருக்கையில் அங்குச் சில பெண்கள்வந்தனர். அவர்களில்ஒருவயதான அம்மையார்,மற்ற பெண்களை, நாயுடு அவர்கட்கு அறிமுகம் செய்து வைத்தார். ஒருபெண் B.Sc. பட்டம்பெற்றுள்ளாள் என்றும், ஒருபெண் B.A. பட்டம் பெற்றுள்ளாள் என்றும் அறிமுகம் செய்து வைத்தார். உடனே நாயுடுஅவர்கள் ஒருபெண்ணைப் பார்த்து, 'நீ எத்தனை பவுண்டு' எடையிருக்கிறாய் என்று கேட்டார். அப்பெண்ஏதோ ஓர் அளவில் தன் எடையைச் சொன்னார். உடனே மறு வார்த்தை, " இதற்குத்தான் நான் பெண்கள் எல்லாம் அதிகம் படிக்கக்கூடாது என்று சொல்கிறேன்; ஆனால் நான் சொன்னால் யார் கேட்கிறார்கள் " என்று அந்த விஞ்ஞானியும் கூறினார்.

இங்ஙனம் போப்பாண்டவரும், விஞ்ஞானியும் கூறுவதைப் பார்த்தால் பெண்கள் அதிகம்படிப்பதும், பணிக்குச் செல்வதும் அவர்களின்உடல்நலத்தைப்பாதிக்கும்என்றுகருதியுள்ளார்கள் என அறிய முடிகிறது. இதுவுண்மையே; என்பதைப் பலரும் உணர்கிறார்கள். ஆனால் செயல்படத்தான் முடியவில்லை.

### பொருள் வருவாயா? பொருள் நஷ்டமா?

இயற்கை அமைப்பிலேயே பெண்கள் மென்மையானவர்கள்; அதனால்தான் அந்தக் காலத்திலிருந்தே வீட்டாட்சியைப் பெண்களிடமும், நாட்டாட்சியை ஆண்களிடமும் கொடுத்தனர் நம் முன்னோர். இவற்றில் சிறுபான்மை விதிவிலக்குகள் இருக்கலாம். பொதுவாக ஆண்கள் வன்மையாகவும்,பெண்கள் மென்மையாகவும்இருப்பார்கள் என்பதாலேயே

தமிழ்மொழியில் தந்தையைக் குறிக்க வல்லெழுத்துக்களைக் கொண்ட 'அப்பா' என்னும் சொல்லும், தாயைக் குறிக்க மெல்லெழுத்துக்களைக்கொண்ட 'அம்மா' என்னும் சொல்லும் இயல்பாகவே அமைந்துள்ளன. இது நமது வாழ்வியலும் மொழியியலும் இணைந்து வந்திருப்பதை எடுத்துக்காட்டுவதா யுள்ளது.

பெண்கள் வெளியில் பணிக்குச் செல்வதால் பொருள் வருவாய் வருகிறது என்று பலரும் கருதுகின்றனர். இங்கு ஒன்றை ஆழமாகச் சிந்தித்தல் அவசியமாகும். ஒருபெண் தன் வீட்டிலிருந்து தான்கற்ற அறிவைக்கொண்டு தன் கணவனை யும் குழந்தைகளையும் பராமரிக்கும் கடமைகளைச் சரிவரச் செய்தும், வீட்டைப் பொறுப்புடன் பாதுகாத்தும், பொருள் வருவாய்க்குத்தக்கபடிக் குடும்பநிலையை உணர்ந்து அதற்குள் செலவு செய்தும் வருவாளே யானால் அவள் செய்யும் குடும்பப் பணிகள் அனைத்திற்கும் ஊதியம் தருவது என்று கணக்கிட்டுப் பார்த்தால் இன்றைய காலநிலையில் ரூ. 500 லிருந்து 1000ம்வரை ஆகும். இதனை விடவா அதிகமாகப் பெரும்பாலான பெண்கள் பணிக்குச் சென்று சம்பாதித்து விடுகின்றனர்? நன்கு எண்ணிப் பார்த்தல்வேண்டும். உடலும் உள்ளமும் சோர்ந்து, நோய் கட்கு ஆளாகின்றனர் பலர். பணிக்குச் செல்வதால் கிடைக்கும் வருவாயைவிடச் செலவுகளே அதிகமாகின்றன. அவை நேரடி யாகத் தெரிவதில்லை. உடை மற்றும் அலங்காரச் செலவுகள், பணிக்குச்சென்றுவருவதால் காலப்போக்கில் உடல்நலம் குறைந்து அதனால் ஏற்படும் மருத்துவச் செலவுகள், குழந்தை களையும் கணவனையும் பராமரிக்க நபர் ஒருவரை நியமிப்பதால் அவருக்கு ஆகும் செலவுகள், அவரின் பொறுப்பற்ற தன்மை யால் விரயமாகும் '[அதிகப்படிச் செலவுகள்போன்ற செல வினங்களையும்]' வரும் ஊதியத்தையும் கணக்கிட்டுப்பார்த்தால் என்ன மிஞ்சும் என்பது ல்எலோருக்குமேபுரியவரும்.

பொருள் அளவில் ஏற்படும் இந்நிலை ஒருபுறம் இருக்க, மனநிம்மதியின்மை, பாசப்பிணைப்பின்மை. உளவியல் அடிப் படையில் ஏற்படும் மன உளைச்சல்கள், இவற்றையெல்லாம் எண்ணிப்பார்த்தால் ஆதாயத்தைவிட விரயமே அதிகம் என்பது எளிதில் புலனாகும்.

**சமுதாயச் சிக்கல் :**

இவை அனைத்தும் தனிமனித, குடும்பநிலையில் ஏற்படும் நஷ்டங்கள். சமுதாய நிலையில் பெண்கள் பணிகளுக்குச்

செல்வதால் மறைமுகமாக ஏற்பட்டுள்ள வேலையில்லாத்திண்டாட்டம் தீர்வுகாண முடியாத பிரச்னையாகிவிட்டது. மேலும் பணிக்குச்செல்லும் பெண்கள் கன்னியராயிருப்பின், அவர்களின் படிப்பிற்கும் பதவிக்கும் ஏற்ப மாப்பிள்ளை கிடைக்காமையாலும் அல்லது கிடைத்தால் அவர்களின் தகுதிக்கேற்பச் செய்யமுடியாமையாலும் திருமணமாகாதநிலை உருவாகின்றது. ஆண், பெண் இருபாலரின் இன்றையவாழ்வியல்நெறிமுறைகள் தான் இன்றுவரதட்சணைக் கொடுமைக்குப் பலரையும் ஆளாக்கி இருக்கிறது.

எனவே இவை அத்துணையையும், நாட்டுநலன், வீட்டு நலன் இரண்டையும் சீர்தூக்கி ஆராய்ந்து நல்முடிவு காண விழைவோர்கள் ஒத்துக்கொள்வார்கள். எனினும் பெருமளவில் இந்நாட்டில் பொருள் ஒன்றே வாழ்க்கை என்று எண்ணுவோர் இருக்கும் வரையிலும் இக்கருத்துக்கள் காலப்போக்கில் தான் உணரப்படும். எனினும் சொல்லவேண்டிய அறங்களைச்சொல்ல வேண்டிய நேரத்தில் சொல்லியேதீர வேண்டும். ஒதுங்கிப் போவதோ அல்லது ஒத்துத்தீமைகளுக்குத் துணை போவதோ நாட்டுநலனில்கருத்துள்ள நம்மைப்போன்றவர்களுக்குஇயலாச் செயலாகும். ஆதலின் எதிர்கால நன்மைகளை நினைத்துச் சொல்லவே வேண்டும். சொல்வது நமது தலையாயகடமை.

" என்று தணியும் இந்தச் சுதந்திரத்தாகம்
என்று மடியும் எங்கள் அடிமையின் மோகம் "

என்று பாரதி கூறியது போன்று,

" என்று தணியும் இந்த உண்மையின் தாகம்
என்று மடியும் இந்த வேலையின் மோகம் "

என்று எண்ணுவது தவிர இன்றைய நிலையில் வேறு செய்ய இயலாது. இதனை உளங்கொண்டே வேத்நாயகம்பிள்ளை அவர்களும் ' பெண்மதிமாலை ' என்னும் நூலில் வீட்டிலிருந்து ஆட்சிசெய்பவள் பெண்என்றும், நாட்டில்சென்று ஆட்சிசெய்பவன் ஆண் என்றும் பாடுகின்றார்.

" வீட்டுக் கதிபதி நீயே — வெளி
நாட்டுக் கதிபதியுன் நாயகன் சேயே "

என்பன அவரது வாக்குகள்.

**சாற்றுக்கவி :**

வேதநாயகம் பிள்ளை அவர்கள் ஆதீனங்கள் மீது பற்றுக் கொண்டமை போன்று, நல்ல தமிழ்ப்புலமையும், தலப் புராணங்கள்பலவும்பாடித்தந்த கவிநலமும்மதிநலமும் உடைய மகாவித்துவான் திரிசிரபுரம் மீனாட்சிசுந்தரம்பிள்ளை அவர்களின் மீதும் ஆழ்ந்த அன்பும், மதிப்பும் கொண்டிருந்தார். மகா வித்துவான் எழுதிய 'சீகாழிக் கோவை' என்னும் நூலிற்கு ஒரு சாற்றுக்கவி எழுதிக் கொடுத்துள்ளார்கள். அதில், சீகாழியில் எழுந்தருளியிருக்கும் இறைவன் எத்துணையோ தமிழ்ப்பாடல் களைப் பெற்றிருப்பார் எனினும், இதுபோன்ற பாடல் அமைந்த நூலைப் பெற்றிருப்பாரோ என்னும் கருத்தமையப்பாடி அக் கோவை நூலைப் போற்றிப் பாராட்டியுள்ளார்.

" விதியெதிரி லரிமுதலோர் புகல்புகலி யீசரே விண்ணோர்
[ மண்ணோர்
துதிபொதிபல் பாமாலை பெற்றிருப்பீர் மீனாட்சி சுந்தரப்பேர்
மதிமுதியன் கோவையைப் போல் பெற்றீர் கொலிக்காழி
[ வரைப் பில்நீதி
அதிபதிநாமெனவறிவீர்நம்முன்னஞ்சத்தியமாயறைகுவீரே'

என்பது அப்பாடல்.

**பெண்மதிமாலையில் சில வரிகள் :**

வேதநாயகம் பிள்ளை அவர்கள் 'பெண்மதிமாலை' என்னும் நூலில் ' ' மதியிது மதியிது பெண்ணே " என்று தொடங்கும் பாடலை இசைகூட்டிப் படிக்கும் வகையில் பாடியுள்ளார். அப் பாடலும் மற்றும் பல பாடல்களும் படிக்கும்பொழுது இந்து சமயப் பாடல்களைப் படிக்கும் உணர்வு ஏற்படும்படி அவர் எழுதியுள்ளார்.

ஆண்டவனை நினைந்து வழிபட்டு அவன் அருள் பெறுது வாழ்வோர்க்கு, எத்துணைப்பட்டங்கள் இருப்பினும் ஏது பலன்? என்று ஓரிடத்தில் கேட்கின்றார்.

" உல கெல்லாம் பட்டமாண் டாலும் — தெய்வ
பலமில்லார்க் கில்லையே பாக்கிய மெக்காலும் "

என்று கூறுகின்றார். நீரை விட்டால் மீனுக்கு வழியில்லை. அது போன்று ஈசனாரை விட்டால் நமக்கு ஆரும் துணையில்லை என்று கூறுகின்றார்.

"நீரைவிட்டால் கெடும் மீனே — ஈச
னுரைவிட் டால்நமக் கார்துணை மானே"

என்று கேட்கிறார். ஆண்டவன் நமக்குக் கொடுத்துள்ள ஒவ்வொரு உறுப்புக்களையும் கொண்டு அவ்விறைவனை வணங்க வேண்டும் என்று கூறவந்தவர். அங்ஙனம் செய்யா விட்டால் அவ்வுறுப்புக்களுக்கு ஒன்றும் உயர்வில்லை என்று கூறுகின்றார்.

"ஈசனைப் போற்றாத வாயே — ஒரு
காசுக் குதவாதக் கசப்புஎட்டிக் காயே"

என்று கூறுகின்றார். இங்ஙனம் நற்கருத்துகளை எளிய சொற்களில் கூறும் திறமுடைய விற்பன்னரின் இந்நல்விழா அனைவருக்கும் நற்கருத்துக்களைச் சிந்திக்க வாய்ப்பாக இன்று அமைந்தது.

வாழ்த்து :

இவ்விழாவில் இருந்து கேட்கும் அனைவரும்; இந்நக் கருத்துக்களைச் சிந்தித்து நலமுடன் வாழவும், இவ்விழாவில் சிறப்பாகப் பங்கு பற்றும் அறிஞர்களும், விழாவை நன்முறையில் நடத்திய அமுதனடிகளும், அன்பர்களும் நலம்பல பெற்று நீடுவாழவும் செந்தமிழ்ச்சொக்கன் திருவருளைச்சிந்திக்கின்றோம்.

வாழ்க சமய நெறிகள் !

வளர்க ஒற்றுமை !!

---

*ஹரத்துவார்*

ஹரனைத் தரிசிக்க கேதாரம் செல்லும் சிவபக்தர்களும், ஹரியைத் தரிசிக்க பத்திரி செல்லும் விஷ்ணு பக்தர்களும் இவ்வூர்வழியாகத்தான்செல்லவேண்டும். துவாரம் என்றால் வழி. கோயில் துவாரங் (சந்நிதி) களில் துவாரபாலகர் இருப்பதாலும் இதனை நன்கு உணரலாம். இவ்வூர் ஹரத்துவார் என்றுதான் முன்பு வழங்கியது என்றும் பின்னர் காலப்போக்கில் ஹரித்துவர் என்று வழங்கிவருகிறது என்றும் சொல்கின்றனர்.

# கேதாரம் நோக்கி....!

திரு. வி. ஆறுமுகம் ஐ. ஏ. எஸ். (ஓய்வு)

( மலர் 42, இதழ் 12, பக்கம் 611 இன் தொடர்ச்சி )

## 2. ஹரத்துவார்

1983 செப்டம்பர் 19. பகல் மணி 1. நாங்கள் பயணம்செய்த ஜனதா எக்ஸ்பிரஸ் ஹரத்துவார் வந்தடைந்தது. காசியில் பெய்த மழையோ வெள்ளமோ இங்கு இல்லை.

ஹரத்துவார் ஒரு புண்ணிய பூமி! வருவோர் போவோர் மிகுதி. சாதுக்களும், ஆத்திகப் பெருமக்களும் இங்கே ஆஸ்ர மங்களையும், தர்ம சாலைகளையும் நிறுவியுள்ளனர்.

ஹரத்துவார் என்ற உடனே 'கும்பமேளா' நினைவுக்கு வரத்தானே செய்யும்! ஆண்டுக்கு ஒருமுறை கும்பமேளா விமரிசையாகக் கொண்டாடப்படுகிறது.

நாங்கள் கங்கைக் கரையில் உள்ள 'மதராஸ் தர்மசாலா' என்ற இடத்தில் தங்கினோம்; சென்னை பெருமாள்செட்டி நிறுவியது அது.

புனித கங்கை இமயத்தில் உற்பத்தியாகிறது; ஹரத்துவார் என்னும் இப்பகுதியில் – இமயமலைப் பள்ளத்தாக்கில் – ஓடத் தொடங்குகிறது. கங்கை சிவபெருமானது திருமுடியிலிருந்து இறங்கி–அவர் திருப்பாதத்தைத் தொட்டபகுதி இது! –இவ்வாறு ஓர் அற்புதமான கருத்து ஹரத்துவாரைப்பற்றிச் சொல்லப் படுவதுண்டு.

காலை – மாலை – கடும்பனி–நல்லகுளிர் – எதனையும் பொருட் படுத்தாமல் கங்கையில் நீராடி, கங்கா மாதாவைப் பூஜை செய் யும் பக்தர்கள் கூட்டம் அங்கு எப்போதும் காணப்படுகிறது. இங்கே 'விஷ்ணுபாதம்' அமைக்கப்பட்டுள்ளது. ஆதலால் இவ்விடத்தை ஹரிக்கிபைரி எனவும் 'பிரம்மகுண்டம்' எனவும் கூறுகின்றனர்.

அந்தப் புனித கங்கைக்கரையில் ஒவ்வொரு நாளும் ஒளி வெள்ளம்! மின்சாரவிளக்கு ஒளி மட்டும் அன்று! பூக்கூடை களில் தீபத்தை ஏற்றிவைத்துக் கங்கையிலே விடுவதனுல்

காணப்படும் – மிதக்கும் தீப ஒளிவெள்ளம்; அந்தக் கோலம் தனிவரலாறு படைக்கும் கொள்ளை அற்புதம்! மாலைநேரங்களில் நூற்றுக்கணக்கான பெண்களும் ஆண்களும் கங்காதேவிக்குப் பூசைசெய்கிறார்கள்; பூக்கூடைகளில் தீபத்தை ஏற்றி வைத்து வழிபடுகிறார்கள்; கங்கா மாதாவுக்குப் பண்டாக்கள் ஐந்து அடுக்குத்தீபாராதனை நிகழ்த்துவதைக் கண்டுகளிக்கின்றார்கள்! தீபம் ஏற்றிவைத்த பூக்கூடைகளைக் கங்கையில் விடுகிறார்கள். அவை ஒளிப்படகுகளாய்க் கங்கையில் மிதந்து செல்கின்றன!

இந்தக் காட்சியைக் கண்டபோது எனக்குள்ளே ஒரு ஆதங்கம்; எழுச்சி! மயிலாடுதுறையிலும் இதுபோலவே காவிரி அன்னைக்கு வழிபாடுசெய்து, கண்குளிரக் காணலாமே! துலா மாதத்திலாவது இப்படி......! அல்லது துலாக்கட்டத்தின் இரு கரைகளிலும்இறைவன் எழுந்தருளி இருக்கும் போதாவது......! மனம் என்னென்னவோ ஆசைப்படுகிறது.

பக்கத்தில் – 1 கி. மீ. தூரத்தில் சப்தசரோவர் என்னும் சப்தரிஷி ஆசிரமம் இருக்கின்றது. 'சப்த' என்பது 'ஏழு' என்ற எண்ணின் வடமொழிச் சொல் – இங்கே கங்கை ஏழு பிரிவாகப் பிரிகின்றது. சப்தசரோவர் என்பது அது. அவ்வேழு பிரிவும் ஏழுமுனிவர்களுக்கு அர்ப்பணிக்கப் பட்டதாகக் கூறப் படும் இடம் 'சப்தரிஷி ஆஸ்ரமம்'.

நீல்தரா என்ற கங்கைக்கரையின் பகுதியில் கனகல் என்று ஓர்இடம் உள்ளது. தட்சன் அரசு செலுத்தியஇடம்; தலைநகரம் அது. 'இங்குதான் தாட்சாயணி, தன் தந்தை வேள்வி செய்த யாககுண்டத்தில் குதித்துத் தன்னை எரித்துக் கொண்டாள்' – இவ்வாறு ஒரு வரலாறு சொல்கிறார்கள்; இவ்விடத்தை 'சதிகட்' என்கிறார்கள். தாட்சாயணி யாகக்குண்டத்தில் விழுந்தபோது அவரைக்காப்பதற்காகவே எழுந்தருளிய சிவபெருமான் இங்கு வீற்றிருப்பதாக ஓர் ஐதீகம். சிவபெருமான் எழுந்தருளியுள்ள கோயில் 'தட்சேஸ்வர்' என வழங்கப்படுகிறது. இங்குள்ள படித்துறை 'தட்சகட்' எனப்படுகிறது. இவ்விடம் பிரம்ம குண்டம் என்ற இடத்திலிருந்து 5 கி. மீ தூரத்தில் உள்ளது.

ஹரத்துவாரின் இருபுறமும் இரு குன்றுகள்; குன்றுகள் இரண்டிலும் தேவி ஆலயங்கள் உள்ளன. அவை மான்சா தேவி, சண்டிதேவி ஆலயங்கள். மான்சாதேவி ஆலயத்திற்குக் கம்பிவழிப்பாதை (Rope way) உள்ளது. கம்பிவழிப்பாதையில் செல்வது ஓர் அலாதியான அனுபவம்! மலைஉச்சியிலிருந்து ஹரத்துவார் இயற்கையழகோடு மின்னிப் பொலியும் காட்சி சொற்களில் அடங்காதது. (தொடர்ச்சி 65ஆம் பக்கம் பார்க்க)

# சென்னைப் பல்கலைக்கழகத்தில்

# சைவசித்தாந்த - வைணவ நெறித்துறைகள்

சென்னைப் பல்கலைக் கழகத்தில் வைணவத்துறை, சைவ சித்தாந்தத்துறைகளின் அறக் கட்டளைகளுக்கு நிதி வழங்கும் விழா சென்னை மயிலாப்பூர் ஏ. வி. எம். ராஜேஸ்வரி திருமண மண்டபத்தில் 17-9-83 அன்று இனிதே நடைபெற்றது.

சென்னைப் பல்கலைக் கழகத்தில் சைவசித்தாந்த வைணவ நெறித்துறைகளை அமைப்பதற்காகத் திரட்டப்பட்ட அறக் கட்டளை நிதியாக ரூ. 28,00,108 யை சென்னை உயர்நீதிமன்ற நீதிபதியும், சைவசித்தாந்த, வைணவநெறித்துறை ஆராய்ச்சிக் கழகங்களின் தலைவருமான மாண்புமிகு நீதிபதி திரு பி. ஆர். கோகுலகிருஷ்ணன் அவர்கள் சென்னைப் பல்கலைக் கழகத்தின் துணைவேந்தர்டாக்டர் எம். சாந்தப்பா அவர்களிடம் அளித்தார்.

துணைவேந்தர் டாக்டர் எம். சாந்தப்பா அவர்கள் பேசுகையில், "சென்னைப் பல்கலைக் கழகத்தில் விரைவில் ஜைன, இஸ்லாமிய மதப்பிரிவுகள் தொடங்கப்படும்" என்று குறிப்பிட்டார்.

விழாவில் பங்கேற்ற மாண்புமிகு செய்தி அறநிலையத்துறை அமைச்சர், திரு. இராம. வீரப்பன் அவர்கள் பேசுகையில் குறிப்பிட்டார்.

"பல்கலைக் கழகத்தில் இஸ்லாமிய மதப்பிரிவு தொடங்க ரூ. 20 இலட்சமும், சமண (ஜைன) மதப்பிரிவு தொடங்க ரூ. 15 இலட்சமும் கொடுத்துவிட்டார்கள். சைவசித்தாந்த வைணவப் பிரிவு தொடங்க தலா ரூ. 20 இலட்சம் வேண்டும். ஆனால் தலா ரூ. 15 இலட்சம் தான் கொடுத்திருக்கிறார்கள். இதற்கு யார், யார் நன்கொடை தருவதாகச் சொல்லியிருக்கிறார்களோ அவர்களிடம் வாங்குங்கள். மீதியை அறநிலையத்துறை தந்துவிடும்.

"நம்நாட்டுக் கருத்துக்கள்தான் மேல்நாட்டுக்குப்போய், அங்கிருந்து அறிவியல் கருத்துக்களாக நம்நாட்டுக்கு வந்துள்ளன. நாட்டு மக்களை இணைத்துச்செல்ல, ஒழுங்குபடுத்த, வழி நடத்த 9-மொழியும், சமயமும் இணைந்து செல்லவேண்டும் என்பதுதான் நம் முன்னோர்கள் நமக்குக் காட்டிய வழி.

“ அறிவியல் அடிப்படையில் சமயம் உள்ளதேதவிர, மூட நம்பிக்கையின் அடிப்படையில் சமயம் உருவானது அல்ல, தமிழையும் சமயத்தையும் பிரிக்க முடியாது. இரண்டும் மனித சமுதாயத்தின் இருகண்கள்.

“ பஞ்சபூதத்தைக் கண்டுபிடித்து அதற்குக் கோவிலும் வைத்திருக்கிறர்கள். ஆனுல் 6 ஆவது ஒரு பொருள் உண்டு. அதைக் கண்டுபிடிக்கத்தான் பல்கலைக்கழகத்தில் மதப் பிரிவு தொடங்கப்பட்டுள்ளது.

“ இந்தப் பிரிவுக்கான அடிப்படையை வகுத்துக்கொடுத்த கோகுலகிருஷ்ணன், மற்றும் நீதிபதிகளைப் பாராட்டுகிறேன் ”

சென்னை நகரக் காவல் துறை ஆணையாளர் திரு. ஸ்ரீபால் அவர்கள் பேசுகையில், விஞ்ஞானம் இல்லாமல் சமயம் இல்லை என்பது ஐன்ஸ்டீன் போன்ற விஞ்ஞானிகள் கண்ட உண்மை என்றும், அத்தகையசிறப்புமிகுந்தசமயத்துறை ஆராய்ச்சிக்குத் துறைகள் அமைப்பது பாராட்டத்தக்க முயற்சி என்றும் குறிப்பிட்டார்.

மாங்காடுகாமாட்சியம்மன்கோவில்சார்பில் பரம்பரைத்தர்ம கர்த்தா, மணலி திரு. இராமகிருஷ்ண முதலியார் சைவசித்தாந்த ஆராய்ச்சித்துறை அமைப்பதற்காக ரூ. 6 இலட்சம் வழங்கினுர். திரு. எம். ஏ. முத்தையா செட்டியார் ரூ. 5 இலட்சம் வழங்கி யிருப்பதாகவும், மற்றும் திரு. ஹரிகோபால் அகர்வால், ஏ. வி. எம். நிறுவனம், எம். ஏ. சி. அறக்கட்டளை சார்பிலும் இதற்கு நிதிவழங்கப்பட்டுள்ளது என்றும் அறிவிக்கப்பட்டது. தருமபுரம் ஆதீனத்தின் சார்பில் ஒரு இலட்சம்ரூபாய் வழங்கப் பட்டுள்ளது என்றும் தெரிவிக்கப்பட்டது.

வைணவநெறித்துறை அமைப்புக்குத் திரு. பி. வி. வி. எஸ். மணி ரூ. 2 இலட்சமும், திரு. ஜி. கே. சுந்தரம் ரூ. 1 இலட்சமும் வழங்கியிருப்பதாகவும் மற்றும் திரு. ஹரிதாஸ் புருஷோத்தம் தாஸ் திரு. வி. எம். பெருமாஞர் செட்டி, திரு. ஜி. கே. ஷெட்டி, திரு. இராம. சுப்பிரமணிய ராஜா ஆகியோரும் டி. வி. எஸ். நிறுவனமும் நிதி வழங்கியுள்ளதாகவும் தெரிவிக்கப்பட்டது.

சைவசித்தாந்த, வைணவ ஆராய்ச்சித்துறை அமைப்புச் செயலாளர் திரு. கருப்பையா ஆரம்பத்தில் வரவேற்ருர். வைணவநெறித்துறையின் செயலாளர் திரு. என். சி. ராகவாச் சாரி நன்றிகூறினுர்.

நன்றி. — தமிழரசு, *1—11—1983.*

கட்டுரை எண். 43

# அபிராமி அந்தாதி

டாக்டர் புலவர் திரு. K. சந்தானராமன், M A., B. Lit., D. P. P. A,. D. U. N., I. U.
பருத்தியூர்.

இடங்கொண்டு விம்மி இணைகொண் டிறுகி இளகிமுத்து
வடம்கொண்ட கொங்கை மலைகொண்டிறைவர் [வலியநெஞ்சை
நடங்கொண்ட கொள்கைநலங் கொண்டநாயகி நல்லரவின்
படங்கொண்ட அல்குற் பனிமொழி வேதப் பரிபுரையே.42

அ. இடங்கொண்டு விம்மி இணைகொண்டு இறுகி இளகி முத்துவடங் கொண்ட கொங்கை மலை.

(1) அகன்று பரப்புற்றும், பருத்தும், ஒன்றினையொன்று இணைதலுற்றும், தளர்வு இன்றி இறுக்கம் பெற்றும், இளகிய மென்மைத் தன்மை பெற்றும், மேலே முத்துமாலை புரளப் பெற்றும் திகழும் திருமுலை என்னும் மலை என்கிறார்.

(2) அங்கவியல் (ஸாமுத்ரிகா லட்சணம்) படி உத்தம வகை மகளிரின் மார்பகங்கள் அடியில், அகன்றும், பருத்தும், தளர்வு இன்றிக் குத்திட்டு நிற்பதாயும், மென்மையுடையதாயும் இருத்தல் வேண்டும் என்பதற்கேற்ப அன்னையின் திருமுலைகள் அமைந்திருக்கின்றன.

(3) காவடிச் சிந்து பாடிய அண்ணாமலை ரெட்டியார் தனது கோமதி அந்தாதியில் "துவதன பூதரி" என்கிறார். 'பூதரம்' என்றால் மலை என்பது பொருள். இரண்டு தனங்களாகிய மலைகளையுடையவள் கோமதி என்கிறார்.

(4) திருமுலை விம்மி நிற்கும் இயல்பினைச் சிங்கை நமச்சிவாயர் 'சிக்கென்ற கொங்கை' எனவும் 'முட்டிய கொங்கை' எனவும் வருணிக்கிறார்.

(5) "குத்து முலைச்சி குழைத்த மருங்கினள்" என்கிறார் திருமூலர் தமது திருமந்திரத்தில்.

வடமொழி, தென்மொழி நூல்கள் அனைத்திலும் இத்தகைய வருணனைகள் நிரம்பி யிருக்கின்றன.

(6) அம்பிகையின் திருமுலைகள் ஊனுடம்பிலுள்ள அங்கங்கள் அல்ல. அவையிரண்டும் பர, அபர ஞானங்களே என முன்பே தெளிவாக விளக்கப்பட்டது. அப்படியாயின் இவ்வகை வருணனைகளின் உட்கருத்துத்தான் என்ன ?

(7) பர, அபர ஞானங்கள் தங்களுக்கென்று அன்னையின் திவ்யமங்களத் திருமேனியில் இடங் கொண்டிருக்கின்றன. அறிவுலகில் அவை தத்தமக்குரிய இடம் பெற்றிருக்கின்றன, பரந்த நோக்கம் என்பது ஞானத்தின் இயல்புகளில் ஒன்று. எனவே அவை ' இடங் கொண்டன. '

(8) விம்முதல் என்பது ஞானத்தின் பெருமிதம். " திமிர்ந்த ஞானச் செருக்கு " என்று பாரதியார் பாடலில் புதுமைப் பெண் அடையும் ஞானப் பெருமிதம் பற்றிப் பேசுகிறார்.

(9) " ப்ரஜ்ஞான கனரூபிணி—அடர்ந்த பேரறிவு வடிவானவள் " என்கிறது சகஸ்ரநாமம். இந்த நாமத்திற்கு முன்னோர் கூறும் உரையாவது :-

" உப்பளங்களில் உப்பைக் காய்ச்சி மலரச் செய்கிறார்கள். தனித்தனி வடிவம் கொண்ட உப்புக் குவியலாக அது உள்ளது. ஆனால் இந்துப்பு மலைப்பாறைபோல் இறுகிய உப்பு. ஸிந்து தேசத்தில் அப்படிப் பாறையாக உப்பு கிடைக்கிறது. கடலுப்பைப் போல் அதில் தனி வடிவம் கிடையாது. மிக நெருக்கமாக இறுகிய உப்பு. அதன் உள்ளும் புறமும் ஒரே உப்புத்தான். வேறு இடைவெளிகூடக் கிடையாது. அதுபோல் இறுகிய வடிவம் ஞான கனம் "

அதாவது இந்துப்பின் இறுக்கம் 'ஸைந்தவ கனம்' என்பது போல், ஞானத்தின்இறுக்கம் ' ஞானகனம். ' தெளிவாகக்கூறின் ஞானத்தின் அடர்த்தியினைக் குறிக்கவே 'இறுகி இளகி' என்றார். இந்துப்புபோல் தானாகவே ஞானமும் இளகுகிறது.

(10) மலை என்பது அசையாத நிலையினைக் குறித்த சொல்லாகும். ஞானத்தின் உறுதிப்பாடு, வைராக்யம் எய்தும் நிலை ஆகியவற்றைக் குறிக்கக் கொங்கைமலை என்றார். மற்றும் அறிவின் பெருமையினை நோக்கியும் மலை என்றார்.

(11) ஞானத்தின் காரணமாகத் தூய்மையும் பற்றற்றநிலையும் கைவரப் பெறுகிறது. எனவே பர, அபர ஞானங்களாகிய கொங்கைமலை மீது தூய்மை அல்லது பற்றற்ற தன்மையாகிய முத்துமாலை புரளுவதாக வருணித்தார். அன்னை பற்றற்ற,

முத்திக்குத் தயாரான நிலையில் உள்ள அடியாரைக் குறிக்க முத்து மாலையினை அணிகிறாள் என்பதனை முன்னமே விரிவாகக் கண்டோம்.

## ஆ. கொங்கை மலைகொண்டு இறைவர் வலிய நெஞ்சை நடங்கொண்ட கொள்கை நலங்கொண்டநாயகி.

(1) மேற்கண்ட இயல்புகள் கொண்ட திருமுலைகளாகிய மலையினைக் கொண்டு, இறைவனது வலிமைமிக்க உள்ளத்தை ஆடல் கொண்ட கொள்கை நலமிக்க தலைவியாவாள் அபிராமி.

(2) மலையினை வளைத்தவனும் மதனனை எரித்தவனுமாகிய இறைவனின் வலிமைமிக்க உள்ளத்தினைத் தனது கொங்கை மலைகளினால் வென்று ஆடல்கொண்டாள் என்பது மேலெழுந்த வாரியான பொருள்.

(3) காமம், வெகுளி, மயக்கம் ஆகியவற்றுக்கெல்லாம் அப்பாற்பட்டது இறைவனின் நெஞ்சு. காமன் கணைக்கு மயங் காத காரணத்துக்காக அவனை 'வலிய நெஞ்சினன்' என்று கூறுவது பொருந்தாது. கருணாமூர்த்தியாகிய அவனிடம், பின், எப்படி வலிய நெஞ்சு வந்தது ?

"அவரவர் வினைகள்நாடி அதன்தகு பொருளை நல்கும் ஈசன்" என்பார் கச்சியப்பர். அச்செயல் புரியும் பொழுது அவன் வேண்டுதல் வேண்டாமையின்றிச் செயல்பட நடுவுநிலை பற்றி நிற்கிறான். எப்பக்கமும் கோணாது நிற்கும் நெஞ்சுறுதியே 'வலிய நெஞ்சு' என்று அழைக்கக் காரணமாயிற்று.

மேலும் கச்சியப்பரே காட்டுவதுபோல் தமது குழந்தைக்கு உற்ற நோய்தீர்க்கப் பிறரைக்கொண்டும் ஊறுசெய்து அதனைத் தீர்ப்பதுபோல் பிற இன்னல்கள் மூலமும் அடியவர்களின் பாவங்களைத் தீர்க்கும் பொழுது அவர்களின் ( தம் மக்களாகிய பசுக்களின் ) நலங்கருதி வலிய நெஞ்சினனாக ஆகிறான் இறைவன்.

அந்த வலிய நெஞ்சினை மகிழ்விக்கத் தக்க பக்குவம் எய்துதல் எப்போது? மலைபோல் அசையாத சித்தம், ஞானத் தெளிவு, வைராக்கியம், பற்றற்றநிலை ஆகியவற்றை எய்தும் பொழுது அவனது உள்ளத்தை நடங்கொள்ளலாம். அதாவது மேற்கூறிய இயல்புகளால் அவனருளை அடைய முடியும் என்பதனையே "கொங்கை மலைகொண்டு இறைவர் வலிய நெஞ்சை நடங்கொண்டநாயகி" என்ற அடிகள் விளக்கு கின்றன.

அடியவர்களுக்கு அவ்வியல்புகளை அன்னைதானே அளித்து அவர்களை மேம்படுத்த உதவும் செயலையே செய்வதால் அச் செயல் ' நலங்கொண்ட கொள்கை ' ஆயிற்று.

அல்லது, உயிர்களின் நலனுக்காக ஐந்தொழில் இடையருது நடைபெற 36 ஆவது தத்துவமாகிய சக்தி, இணைந்து செயலாற்றுதலே ' நலங்கொண்ட கொள்கை. '

அச் செயலுக்குத் தானே முதல் தலைவியாய் நின்று நடத்துவதாலும், அவள் அனைத்தினுக்கும் ஏகநாயகி ஆனதினுலும் அவளை ' நாயகி ' என்ருர்.

### இ. நல்லரவின் படங்கொண்ட அல்குற் பனிமொழி.

(1) அவள் இனிய சொற்களையுடையவளும் அரவினது ( பாம்பினது ) படத்தினையொத்த திருவல்குல் ( மறைவிடமும் ) உடையவளும் ஆவாள். இவ்வருணனையும் நூல் மரபு அல்லது அங்கவியல் மரபு ஆகும்.

(2) இங்கு நல்லரவின் படங்கொண்ட அல்குல் குண்டலினி சக்தியினை உணர்த்தி நின்றது. ஏனெனில், அச்சக்தி அரவின் வடிவுடையது ஆகும்.

(3) " நான் ஆதியில் இரண்டு நெறிகளை உணர்த்தினேன். ஞானிகளுக்கு ஞானமும் யோகிகளுக்கு யோகமும் அந் நெறிகள் " இவ்வாறு கீதையில் கண்ணன் கூறுகிருன்.

அதுபோல் பர, அபர ஞானத்தாலும், யோகத்தாலும் இறைவனை அடையும் வழி இங்கு உணர்த்தப்பட்டது.

அவற்றினை எப்படி அடையலாம் ? அவை எங்கே கூறப்பட்டுள்ளன ? அதுவும் அன்னையின் அணிகலனுகத்தான் திகழ்கிறது என்கிருர் பாடலின் நிறைவுச்சீரில்.

### ஈ. வேதப் பரிபுரையே

(1) வேதங்களைச் சிலம்புகளாக அணிந்தவள் அம்பிகை.

(2) " சர்வமந்த்ரஸ்வரூபிணி " – " எல்லா மந்திரங்களின் வடிவானவள் " என்கிறது சகஸ்ரநாமம்.

ஏழுகோடி மந்திரத் தொகுதிகள் உள்ளன வென்றும், அவற்றினை அன்னையின் வடிவாகக்கருதி வழிபடும் முறையினை ' மந்த்ர அத்வா ' என்றும் கூறுவர். அம்மந்திரமயமே அவளது வடிவானுல், அவளது திருவடிச் சிலம்புகள். வேதங்களும் திருமுறைகளும் ஆகும்.

(3) ஒலி எழுப்புதல், உள்ளிடு பரல்உடைமை, இணையாக இருத்தல். ஆகியவை சிலம்புகளின் இயல்புகள் ஆகும். வேதங்கள் ஒலிவடிவத்தினையே முக்கியமாகக் கொண்டிருப்பதனாலும், அதன் உள்ளீடாக மெய்ப்பொருள் விளங்குவதாலும் அவற்றினைச் சிலம்பாகக் கூறினர் எனலாம். மேலும் வடமொழி வேதங்கள், தென்மொழித் திருமுறைகள் என அவை இணையாகவும் இருப்பதால் அவை பரிபுரங்கள் ஆயின.

## எ. மையக் கருத்து

"ஸ்தாணுவாய் அசைவற்றதாய் இருக்கும் சிவத்தில் சக்தி ஸ்புரிக்கும் பொழுது ஓர் ஸ்பந்தம் அசைவு - துடிப்பு - VIBRATION ஏற்படுகிறது. இந்தத் தத்துவத்தைத்தான் இப்பாடல் காவ்ய ரஸனையோடு கூறுகிறது" என்கிறார் உரையாசிரியர் திரு. சண்முகநாதன்.

வாசகர்கள் தெளிவாக அறிந்து கொள்ளும் பொருட்டு இப்பாடலின் சொற்றொடர்களும் அவையுணர்த்தும் தத்துவங்களும் அட்டவணை ஆக்கித் தரப்பட்டிருக்கிறது.

| சொற்றொடர் | தத்துவம் |
|---|---|
| 1 வேதப் பரிபுரை | அன்னையின் மந்திரவடிவு. |
| 2 நல்லரவின் படங்கொண்ட [அல்குல் | குண்டலினி சக்தி அல்லது [யோகம். |
| 3 கொங்கைகள் | பர அபர ஞானங்கள். |
| 4 மலை | அசையாத சித்தம். |
| 5 விம்முதல் | ஞானப் பெருமிதம். |
| 6 இறுகுதல் | ஞான கனம். |
| 7 முத்துவடம் | தூய்மை - பற்றற்றநிலை. |
| 8 வலியநெஞ்சைநடம் கொள்ளல் | உறுதியான நெஞ்சை மகிழ் [வித்தல். |
| 9 நலங்கொண்ட கொள்கை | உலகவிளக்கம் கருதி சிவசக்தி [ஐக்யம். |

திருமுறைகளிலும், வேதசாஸ்திரங்களிலும்தேர்ச்சிபெறுதல் இப்பாடலின் பாராயணபலன் ஆகும்.

# இனிதே வாழி....!

**திரு. அரங்க. முத்துமணி**
மாவட்டப் பதிவாளர் (தணிக்கை), தஞ்சாவூர் – 613 001

**வெண்பா**

ஆலவாய்ச் சொக்கர் அருளிணையே சிந்தித்து
ஞாலமே உய்ய நயந்திடுவார் — மூலர்போல்
ஆன்ற தவசீலர்; அண்ணல்எம் சண்முகப்பேர்
தோன்றலே என்தன் துணை.

**வேறு**

திருத்தருமை யாதீனப் பூங்காவில்
மணம்பரப்பித் தேன்பிலிற்றி
அருளாசி தனையேந்தி அடியார்தம்
பெருமையினை அழகாய்ச் சொல்லி
குருமணிகள் திருவுளத்தைக் குன்றினது
அருவியெனக் கொட்டி, நன்மை
தருகின்ற வளர்“ஞான சம்பந்தம்”
தரணியிலே தழைத்து வாழ்க!

தெய்வநெறிக் கட்டுரைகள் பக்கமெலாம்
தித்திக்க, தேவாரத்தில்
வையந்தான் போற்றுகின்ற வாசகத்தில்
வீசுகின்ற வளத்தையெல்லாம்
உய்யும்வகை தருகின்ற உயர்“ஏடும்”
நாற்பத்து மூன்றும்யாண்டை
எய்துகின்ற நிலைகண்டேன்; இவ்வேடு
வையத்தில் இனிதே வாழி!

---

# அவளின் மௌனம்

## திரு. பேச்சிமுத்து

"என்னங்க" தன் அருகே நின்று இருந்த கணவரை அழைத்தாள் மீனாட்சி.

"என்ன விஷயம்" விரக்தியோடு கேட்டார் பரமசிவன் மீனாட்சியின் கணவர்

"ஊர் முழுக்க எல்லோரும் தீபாவளிப் பண்டிகையைக் கொண்டாடுறாங்க ..."

வார்த்தைகளை மெதுவாக வெட்டி வெட்டிச் சொன்னாள் மீனாட்சி.

" அதுக்கு என்ன இப்போ... " என்றார் பரமசிவம்.

தீபாவளியை மீனாட்சி எதற்காக ஞாபகம் படுத்துகிறாள் என்பது பரமசிவத்திற்குத் தெரியும். இருப்பினும் அவர் தெரிந்ததுபோல் காட்டிக் கொள்ளவில்லை.

ஊரில் எல்லாப் பெண்களும் பட்டுப்புடவைகளுடனும் புதுப்புடவைகளுடனும் உலா வரும் தீபாவளிநாளில், தனக்கும் ஒரு புதுப்புடவை வேண்டும் என்பதைக் கேட்காமல் கேட்கிறாள் மீனாட்சி

அவளைச் சொல்லிக் குற்றமில்லை. ஓகோஎன்றுவாழ்ந்தவள். ஆனால் இன்று பரமசிவத்தின் நிதிநிலைமை சரியாக இல்லை. எனவே ஒரே புடவையைப் பல நாள் உடுத்திக் கொண்டிருக்கிறாள் மீனாட்சி. எனவேதான் தீபாவளிக்காவது புதுப்புடவை கிடைக்காதா என்ற ஆவலில் கணவரை நச்சரிக்கத் தொடங்கினாள் மீனாட்சி.

"இந்தா பாரு மீனாட்சி ... தீபாவளிக்குப் புதுப்புடவை வேணும்... பொங்கலுக்குப் பட்டுப்புடவை வேணும்னு நினைக்கிறதை முதலில் மறந்துவிடு..."

குரலை சற்று உயர்த்திக் கோபமாகச் சொன்னார் பரமசிவம். அவர் அவ்வாறு கூறியதும் மீனாட்சிக்குச் சற்றுக் கோபம் ஏற்பட்டது.

"என்னங்க...... பொண்ணாய்ப் பிறந்தவளுக்குப் புடவை ஆசை இருக்கக் கூடாதா..........."

கண் கலங்கக் கேட்டாள் மீனாட்சி.

" இருக்கலாம்... ஆனால் கணவன் நிலைமையை மனைவி நினைச்சுப் பார்க்க வேண்டாமா...புதுப்புடவை வேணுமின்னு கேட்கிறியே மீனாட்சி...... என்னோட நிலைமையைக் கொஞ்சமாவது யோசிச்சுப் பார்த்தியா... இரண்டு வருஷமாக ஒரே வேஷ்டியைக் கட்டிட்டு இருக்கேனே......... அதை நீ மறந்துட்டியா... "

குரல் தழுதழுக்கக் கேட்டார் பரமசிவம். அவர் சொன்னதைக் கேட்டதும் மீனாட்சிக்குக் கோபம் பீறிட்டது.

" இப்படிச் சொல்ல உங்களுக்கு வெட்கமாக இல்லையா... இன்னிக்கு நாம இந்த நிலைமைக்கு வந்ததற்கு நீங்கதான் காரணம் "

" நீ என்ன சொல்றே மீனாட்சி "

அதிர்ச்சியுடன் கேட்டார் பரமசிவம்.

" பின்னே என்ன...... ஒண்ணு... இரண்டா...... நமக்கு இருந்த 200 ஏக்கர் நிலத்தையும் பலர் பங்கு போட்டுக் கிட்டாங்க...... அப்போ நீங்க எதுவுமே சொல்லலே...... நம்ம நிலத்தைப் பறிச்சுக்கிட்டவங்க வருஷா வருஷம் நமக்கு நெல் தருவாங்கன்னு சொன்னீங்க... ஏதோ ஒருசிலர் கொடுத்தாங்க பலர் கொடுக்கவே இல்லே...... அப்பவும் நீங்க மவுனமாக இருந்தீங்க... அதுனாலே...... வழக்கமா நெல் கொடுத்து வந்தவங்களும் இப்போ நம்மை எட்டிக்கூட பார்க்கிறது இல்லே... எல்லாத்துக்கும் காரணம் நீங்கதான்... "

கோபத்தோடு வார்த்தைகளைப் பரமசிவத்தை நோக்கி வீசினாள் மீனாட்சி.

" உண்மை தான் மீனாட்சி. வயசு காலத்துலே நமக்கு ஏன் சொத்துன்னு நினைச்சு சும்மா இருந்துட்டேன்... பாவம்... நம்ம நிலத்தைப் பங்கு போட்டுக் கொண்ட குடும்பங்கள் நல்லா இருக்கட்டும்னு நினைச்சு விட்டுட்டேன்... "

" உங்க நல்ல எண்ணத்தாலே கஷ்டப்படுகிறதுநாமதான். இன்னிக்குத் தீபாவளி புதுப்புடவை வேண்டாம்... குறைந்த பட்சம் தலைக்கு தேய்ச்சுக் குளிக்க நல்லெண்ணை கூட இல்லையே...... "

" இப்போ என்னை என்ன செய்யச் சொல்றே..."

" நம்ம நிலத்தை அனுபவிச்சுட்டு இருக்கறவங்க வீட்டுக்குப் போங்க...... இரண்டுலே ஒண்ணு கேட்டுட்டு வாங்க... "

மீனுட்சி சொன்னதும் பரமசிவம் ஒரு நிமிடம் யோசித்தார். பின்பு மீனுட்சியை நோக்கிக் கூறத்தொடங்கினுர்.

" மீனுட்சி...... நமக்குச் சொந்தமான நிலத்தை அனுபவிச்சுட்டு வர்ற குடும்பங்களைப் பழி வாங்க நாம ஆரம்பிச்சுட்டா நமக்கும் மனிதர்களுக்கும் வித்தியாசம் இல்லாம போயிடும். நான் யார்... இந்த உலகத்திற்கே முழு முதற்கடவுள்... நீ என் மனைவி... அதாவது அன்னை பராசக்தி... நம்ம கோவிலுக்குப் பலர் எழுதிவைச்ச நிலங்களை சிலர் அனுபவித்து வருவது எனக்கும் பிடிக்கலே தான். அதுக்காக அவங்களைப்பழிவாங்குறது நல்லதல்ல... " என்ருர் சிலை வடிவில் அந்தக் கோவிலில் இருந்த பரமசிவம். அவர் அருகே சிலையாக நின்று இருந்த மீனுட்சி அதைக் கேட்டு மறுபடியும் மவுனமானுள்.

நன்றி — தினமலர் - வாரமலர் 44. 30—10—83.



---

# ஜப்பானில் ஆன்மீகக் கல்வி போதனை

ஜப்பானில் ஆரம்பப் பள்ளிகளிலும் ஜூனியர் பள்ளிகளிலும் ஆன்மீகக் கல்வியைப் போதிக்க ஜப்பானியக்கல்வி அமைச்சரகம் திட்டமிட்டுள்ளது.

இதன் முதல்படியாக முதல்வர்கள், தலைமை ஆசிரியர்கள் இவர்களுக்குப் பயிற்சிகள் அளிக்கப்படவிருக்கின்றன. இதற்கான பாடப் புத்தகங்களும் எழுதப்படவிருக்கின்றன.

ஆரம்பப் பள்ளிகளில் 70 சதவிகிதமும், ஜூனியர் பள்ளிகளில் 62 சதவிகிதமும் இப்போது ஆன்மீக போதனைகள் நடத்தப்படுகிறது, இப்போதனையின்விளைவாக மாணவர்களிடையே வன்முறை, ஒழுங்கீனம் ஏற்படாமல் தடுக்க முடியும் என்று கருதப்படுகிறது.

ஒரு ஆண்டுக்கு 35 மணி நேரம் ஆன்மீகக் கல்விக்காக ஒதுக்கப்படவேண்டும் என்று பள்ளிகளை நடத்தும் தனியார் நிறுவனங்களுக்கும் அறிவிக்கப்பட்டுள்ளது.

நன்றி. —தமிழரசு 1—12—1983.

# திருவருட்பாத் திரட்டு

( பொழிப்புரையுடன் )

**வித்துவான் திருமதி. ப. நீலா** எம். ஏ.,

தமிழ்ப்பேராசிரியை,

தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி, தருமபுரம்.

அங்கண் வானத்தமரர் பிறவிப் பெரும்பிணிக்கு
அருமருந் தெனவும் அயன்மால்
ஆதியோர் அரகரா இந்த நதியற்புதம்
அகிலத்துள் இல்லையெனவும்
எங்கள்,மல,திமிரபட லம்கிழித் தோட்டுதற்கு
இரவிசத கோடி யெனவும்
இந்திரசா லப்பகட் டாகும் பிரபஞ்சமொடு
இரண்டுவித மாயை யென்னும்
பங்கமுற் றும்கழுவ வருஞான ஆனந்த
பரிசுத்த சலதியெனவும்
பரமகல் யாணகுண பரமசிவ சத்தியொடு
பாகீரதிப் பெயர்புனை
கங்கைநதி யைப்புவியில் அன்னையென வைத்தநின்
கருணைதனை என்சொல்லுவேன்
காசிவிசு வேசனும் தேசோ சொருபமே
கருணை நிதித் தெய்வமே. 8

(பொ-ரை) காசிவிசுவேசனே! இடமகன்ற வானத்தமரர்களும் பிறவிப்பெரும்பிணிக்கு மருந்து இதுவே என்றும், அயன் மால் முதலியோரும் சிவனை 'அரகரா' எனப் போற்றி இந்த நதி போன்ற அற்புதம் உலகில் வேறில்லை என்றும், இதுஎங்கள் மலவிருளைப் போக்குகின்ற நூறுகோடி சூரியரென்றும், மயக்கும் பெருமையுடைய உலகில் அசுத்த பிரகிருதி மாயையாம் குற்றங்களைக் கழுவிடும் ஞான ஆனந்த தூயகடல் என்றும் போற்றும் படி, மேலான குணங்கள் அமைந்த பரமசிவத்தோடொன்றும் பாகீரதிப் பெயர் கொண்ட இந்த கங்கை நதியை உலகில் அன்னையென வைத்தநின் கருணையை எப்படிப்பாராட்டுவேன்,

(க-து) பெருமை மிகு கங்கையைத் தந்த நின் கருணையை மறவேன்.

(கு-ரை) மலதிமிரபடலம் - மலவிருள். இந்திரசாலம் - ஒன்றை ஒன்ருகக் காட்டல், 'இத்திரசாலம் புரிவோன் யாவரையும் தான் மயக்கும் தந்திரத்தில் சாராது சார்வதுபோல்' (கந். கலி. வரி 1-8) இரண்டுவிதமாயை-அசுத்த, பிரகிருதி மாயைகள். பங்கம் - குற்றம். பாகீரதி - பாகீரதன் வேண்ட வந்தமையால் பெற்றபெயர்.

'அன்று எம்பிரான் ஆணையால் பகீரதன் பொருட்டுச்
சென்று நீயொரு தீர்த்தமாய்த் திளேப்பவர் களங்கம்
ஒன்று தீவினைத் தொடக்கறுத் தொழுகெனப் பணித்தான்'

(திருவிளை. அன்னக்குழி - 10)

சரணம் உன்சரணமல் லால்இங்கு வேறில்லை
தங்கிடும் சர்வசீவ
தயாபர எனக்கருள்வை என்றுன்னை நம்பிஉன்
சந்நிதியை வந்தடைந்தேன்
மரணகா லந்தனில் மணிகன்னி கைத்துறையில்
வந்து சேரச்செய்துநீ
மால்வெள்ளை விடையின்மேல் வேலனுமை [யவளோடு
வந்தென் வலச்செவியிலே
பரமவுப தேசம்வைத் தாவிபர மானந்த
பரமசலதியில் மூழ்கிடப்
பாழான காயம்மெய்ப் பாகீ ரதிப்புனல்
படிந்திட வரம்தந்தருள்
கரணங் கடந்தமுழு முதலே சிதாகாச
கனகச்பை நடராஜனே
காசிவிசு வேசனும் தேசோ சொருபமே
கருணை நிதித் தெய்வமே. 9

(பொ-ரை) மனம் புத்தி சித்தம் அகங்காரங்களுக்கு அப்பாற்பட்டவனே! அறிவு வெளியாம் பொற்சபையில் நடமிடும் அரசே! காசிவிசுவேசனே! உன் திருவடி தவிரவேறு துணையில்லை. எல்லா உயிர் வருக்கத்தினிடமும் தங்கும் கருணாகரனே! எனக்கும் அருள்வாய் என்று உன்னைநம்பி உன்சந்நிதியை வந்தடைந்தேன். மரணகாலத்தில் மணிகன்னிகைத்

துறைக்கு என்னை வந்து சேரும்படிச் செய்து பெரிய வெள்ளை விடைமேலே வேலவனும் உமையவளும் தொடரவந்து என் வலச் செவியிலே மேலான உபதேசம் செய்து, என்னுவி மேலான ஆனந்தக் கடலில் மூழ்கிடவும், பயனற்ற உடல் கங்கைப் புனலில் படிந்திடவும் வரம் தந்தருள்க.

(க–து) என்னுயிர் மேற்கதியடைய உடல் கங்கையில் படிய அருள்க.

(கு–ரை) மால் வெள்ளைவிடை – பெரிய தூயஎருது. திருமாலாம் விடையெனலும் ஆம். வலச்செவியில் தாரக மந்திரம்' உபதேசம் செய்தலை 'தேகம்விடத் தாரகத்தைச் செப்பும் நாள் என்று என்று கோகிலமே கேட்டுவந்து கூவியே கூறுவையே (இதேநூல் – 6. 3) இதனுல் காசியில் இறந்தவர்களின் வலது காது வான்நோக்கி இருப்பது உண்மையென்கிருர்கள்.

மெய்யென்று பெயர்பெற்ற பொய்யான என்னுடலம்
விடுகாலம் நானறியவும்
விமலமணி கன்னிகைத் துறைவந்து சேரவும்
மெய்க்கங்கை நதிமுழ்கவும்
தூயவெண்ணீ றங்கம் எங்குமே பூசவும்
சுத்தகண் டிகைபூணவும்
தொண்டுசெயும் அடியார்கள் தோத்திரம்
சூழ்ந்துகொண்டே நிற்கவும் [சொல்லியே
ஐயந்த நேரத்தில் உந்தாமல் நிற்கவும்
ஐம்பொறிகள் நெறிநிற்கவும்
அறிவுபர மானந்த சின்மயா காசநின்
அடியிணைகள் சிந்திக்கவும்
கைகள்தொழ வாய்அஞ் செழுத்துச் சரிக்கக்
கடாட்சம் வைத்தருள் ஐயனே
காசிவிசு வேசனும் தேசோ சொருபமே
கருணு நிதித்தெய்வமே. 10

(பொ – ரை) காசிவிசுவேசனே! மெய்யென்ற பெயர் மட்டும்கொண்ட அழியும் பொய்யான என்னுடலம் விடுகாலம் நானறியவேண்டும், அப்போது தூயமணிகன்னிகைத்துறைக்கு வரவும், கங்கையில் மூழ்கவும், தூயவெண்ணீற்றை உடலெங்கும் பூசவும், உருத்திராக்க கண்டிகை பூணவும், தொண்டு செயும் தொண்டர்கள் எனைச் சூழ்ந்து தோத்திரம் சொல்லிக்

கொண்டே நிற்கவும், 'ஐ' என்ற கபம் அந்நேரம் மேலெழாமல் ஐம்பொறிகளும் நன்னெறியில் நிற்கவும், அறிவு பரமானந்த ஞானவொளியாம் அடியிணைகளை நினைக்கவும், கைகள் தொழும் படியும், வாய் அஞ்செழுத்து உச்சரிக்கும்படியும் கருணைப் பார்வைதனை என்மேல் வைப்பாயாக.

(க-து) மரணகாலத்திலும் உனையேநினைக்கவிழைகிறேன். அருள்க.

(கு-ரை) மெய்யென்ற உடல் – 'பொய்யான பொய்யுடலை மெய்யென்றுன் – பொய்யென்றுன் மீட்டு' – (பண்டாரமும் – 21)
'சுத்த கண்டிகை – உருத்திராக்கம்'

' உதவுந்திருநீறுயர் கண்டிகை கொண்ட வேணி
முதன்மும்மையினுல் உல காண்டனர் மூர்த்தியார்தாம் '

(பெரி. மூர்த்தி–46)

ஐஉந்தல் – 'மிகினும் குறையினும் நோய் செய்யும்; நூலோர் வளிமுதலாய் எண்ணிய மூன்று' – (திருக்குறள் – 951)

'' புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி அறிவு அழிந்திட்டு
ஐம்மேலுந்தி அலமந்த போதாக அஞ்சேல் என்று
அருள்செய்வான் அமரும்கோயில் '' (திருஞா –1–130–1)

' ஐயாறு வாயாறு பாயாமுன் நெஞ்சமே
ஐயாறு வாயால் அழை ' (ஐயடிகள்–க்ஷேத்தி. வெண்– 3)

மணிகன்னிகை – ' உடல்விடும்போது நன்மணி கர்ணிகைப் பூந்துறை பேணுமாறு பெறவேண்டும்' – (காசி. கல – 17) மணி–பிரணவம்–இங்கேதான் காதில் பிரணவ உபதேசம் செய்கிறூர் என்கிறூர்கள். மணிகர்ணிகை என்பது ரத்னகுண்டலம் என்று பொருள் படும். திருமால் தன் சக்கரத்தால் உண்டாக்கிய இத் தீர்த்தக்கரையில் தவம் செய்து கொண்டிருக்க – பார்வதி பரமேசுவரன் அவ்விடம்வர, பார்வதியின் காதுகுண்டலம் இத் தீர்த்தத்தில் விழ – மைத்துனக்கேண்மையால் திருமால் அதை மறைக்க – இத்தீர்த்தத்திற்கு மணிகர்ணிகை என்றே பெயர் வந்தது. ( காசியாத்திரை – த. ஆ. ப. 80)

(தொடரும்)

# பார்ப்பவர்களுக்கு அழகைக்கொடுத்து சொக்கவைக்கும் காதல்கன்னி மரம்

கீரைத்தேவையைப் பெருமளவுக்கு பூர்த்திசெய்யக்கூடியது லட்சக்கட்டை மரம். இதன் காரணமாக இதற்கு மரக்கீரை என்ற பெயரும் உண்டு. லட்சக்கட்டை ஒரு அமைதியான சிறு மரம். இதன் மஞ்சள் நிற இலைகள் மரத்திற்கு ஒரு தனி அழகை கொடுக்கின்றன. இராமநாதபுரம் செல்பவர்கள் அரண்மனை வாயிலுள்ள நன்கு வளர்ந்த இந்த மரத்தை ஒரு முறை கண்டாலே அதன் அழகில் சொக்கிப்போவார்கள். அதன் காரணமாகவே ஆங்கிலத்தில் லேடி லவ் (காதல் கன்னி) என்ற பெயரும் உண்டு. சென்னையிலே சாலைகள்கூடும் இடங்களில் உள் அழகுப் பூங்காக்களிலும்கூட லட்சக்கட்டை பிரதான இடம் பெற்றுப் பச்சைநிறப் புல்வெளிக்கு மெருகூட்டுகின்றது. மதுரைநகர மக்கள் லட்சக்கட்டையின் மற்றொரு வகையை அதிக அளவில் வீடுகளில் பயிரிட்டுள்ளனர். இந்த ரகத்தின் இலைகள் மிகவும் அகலமானது. பச்சை நிறமானது. வேகமாக வும் வளர்கின்றது. மஞ்சள்லட்சக்கட்டை இலையைக் கீரையாகச் சமைத்து உண்கின்றனர். லட்சக்கட்டை மரத்தை விஞ்ஞானி கள் சோனியா ஆல்பா என்று வழங்குகின்றனர். நிக்டாஜி ஜினேசியா என்ற குடும்பத்தைச் சேர்ந்தது. லட்சக்கட்டை மரம் ஆண்டு முழுவதும் பசுமையாக இருக்கும். மெதுவாக வளர்ந்தாலும் இலைகள் நாள்பட நிலைத்துநிற்கும். இதன் இலை களைக் கீரையைப்போல உண்ணலாம். பருப்புடன் சேர்த்துப் பொரியலாகத் தயாரித்தால் மிகவும் ருசியுடையதாக இருக்கும். இந்தக்கீரைக்குப் பிணி தீர்க்கும் சக்தி உண்டு. அஜீரணக் கோளாறுகள் வயிற்றுவலி முதலியவைகளை நீக்கும். மூட்டுவலி யையும் நீக்கும். லட்சக்கட்டையைப் போத்துகளைக்கொண்டே பயிரிடலாம். மற்றபடிப்பூத்துக்காய்ப்பதில்லை. வீடுகளின் முன் புறத்தில் குரோட்டன்ஸ்செடிகளுக்குப்பதில் லட்சக்கட்டையை வளர்க்கலாம். அழகிற்குஅழகும் வீட்டுத்தேவைக்குக் கீரையும் கிடைக்கும். பள்ளிகளிலே சில மரங்களை நட்டு வளர்த்தால் மதிய உணவிற்குக் கீரையும் கிடைக்கும். தோட்டங்களிலே கிணறுகளுக்கு அருகே நட்டால் நிழலும் கிடைக்கும். விற்ப னைக்குக்கீரையும் கிடைக்கும். மொத்தத்தில் மனிதனுக்குக்கீரை யும் அழகும், நிழலும் தந்திடும் லட்சக்கட்டை மரம் நகரங்களி லும், கிராமங்களிலும் பயிரிட ஏற்றது. அதன் மூலம் வைட்ட மின்களும் உலோகஉப்புக்களும் பெற்றுத் தேகநலம் பெற்றிட லாம். எனவே இந்த மழைக் காலத்தில் ஒன்றிரண்டு குச்சிகளை யாவது நட்டு வீடுகளில் லட்சக்கட்டை மரத்தை வளர்த்திட ஆவன செய்யுங்கள் என ஸ்ரீவில்லிபுத்தூர் பயிற்சிவழி தொடர் புத்திட்டவேளாண்மைஉதவிஇயக்குனர் பி. கே. ஆனையப்பன் தெரிவிக்கிறார்.

நன்றி. — *தினமலர், 19—9—83.*

# " சிறை பெரு நீர்போல் "

தருமையாதீனப்புலவர், செஞ்சொற்கொண்டல், தமிழாகரர்,
**டாக்டர் திரு. சொ, சிங்காரவேலன்** எம். ஏ., பிஎச்டி.,
பேராசிரியர், அ. வ. அ. கல்லூரி, மன்னன்பந்தல்.

**திருவாசகப் பாட்டு :**

" குறைவிலா நிறைவே கோதிலா அமுதே
ஈறிலாக் கொழுஞ்சுடர்க் குன்றே
மறையுமாய் மறையின் பொருளுமாய் வந்தென்
மனத்திடை மன்னிய மன்னே
சிறைபெருநீர் போல் சிந்தைவாய்ப் பாயும்
திருப்பெருந் துறையுறை சிவனே
இறைவனே நீயென் உடலிடங் கொண்டாய்
இனி உன்னை என்னிரக் கேனே "

என்பது திருவாசகம், கோயில் திருப்பதிகத்தின் (22) ஐந்தாவது திருப்பாட்டு, இதன் மூன்றும் அடியில் வருவது ' சிறைபெரு நீர் போல் ' என்ற உவமை. இந்த உவமையின் பாட வேறுபாடு பற்றி ஆய்வதே இக்கட்டுரை.

சபாபதி முதலியாரும், காழித்தாண்டவராயரும் கொண்ட பாடம், " சிறை பொரு நீர் போல் " என்பதாகும். (1956 ஆம் ஆண்டு வெளியிடப்பட்ட மர்தே கம்பெனியாரின் திருவாசகப் பதிப்பு இதனைக் காட்டுகின்றது. – பக்கம் 167) அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.( திரு. நீ. கந்தசாமிப் பிள்ளை ) தன் 1964 ஆம் ஆண்டுத் திருவாசக மூலப்பதிப்பில், "சிறை பொரு நீர் போல்" என்ற பாடமே கொண்டுள்ளது. ' சிறை பொரு ' என்பதற்குக் " கட்டில் நிற்காத " எனப் பொருளும் தரப்பட்டுள்ளமை அப் பதிப்பில் காணப்பெறும். (பக்கம் 271)

இப்பதிப்பின் பின்னர் வெளிவந்த தருமையாதீனப் பதிப்பு (1966) ' சிறை பெரு நீர்போல் " என்றும், யாழ்ப்பாணம் அருளம்பலவனார்பதிப்பு (1967) 'சிறைபெரு நீர்போல்' என்றும் பாடம் கொண்டுள்ளன. " சிறை – அணை; நீர் என்றது, வெள் ளத்தை. தண்மையும் பெருமையும் பற்றிப் பேரின்ப வடிவின ளுகிய இறைவனுக்கு வெள்ள நீர் உவமையாயிற்று " என்

றெழுதும் திரு. சி. அருணைவடிவேலு முதலியார், " சிறை பொரு நீர் போல் " என்னொரு பாட வேறு பாடு இருப்பதைச் சுட்டிச் செல்ல வில்லை. ( தருமையாதீனப் பதிப்பு - பக்கம் 482 ) " கரையில்லா நீர்ப்பெருக்குப் போல என்னுள்ளத்தின் கண்ணே அளவு கடந்து பாய்ந்து கொண்டிருக்கின்ற " என்று பதவுரை எழுதிய அருளம்பலவனர், " சிறை பெரு நீர் மிக விரைந்து வருவது போல இறைவன் அன்பருள்ளம் புகுதலின் 'சிறை பெரு நீர் போல்' சிந்தைவாய்ப் பாயும் திருப்பெருந் துறை யுறை சிவனே " என்றார் " என உரைக்கின்றாரே யன்றிப் பாட வேறுபாடு பிறிதொன்றிருப்பதைச் சுட்டியும் சென்றாரில்லை (பக்கம் 926)

" சிறை " என்பதற்குக் ' கரை ' என்று பொருள் கூறுவதை விட அணை என்று பொருள் உரைப்பதே மிக்க பொருத்தம் உடையதாகும்.

" வருவிசைப் புனலைக் கற்சிறை போல
ஒருவன் தாங்கிய பெருமை யானும் "

(தொல்காப்பியம் - புறத்திணையியல் - 8)

என்பர் தொல்காப்பியர்; கல்லால் செய்யப் பெற்ற அணையே ' கற்சிறை ' எனப்பட்டமைகாண்க. அணையிற் செறிக்கப்பட்ட நீர் அதனைப் பொருது உடைத்துக் கொண்டு வரும்போது, மிக்க விரைவுடையதாய்ப் பாய்தல் அனைவரும் கண்டறிந்தது' கரையில்லா நீர்ப் பெருக்கின் வேகத்தை விட அணை பொருது வரும் நீர்ப் பெருக்கின் வேகம் மிகுதி உடையதாகும். " பெரு " என்ற பாடத்தை விடப் " பொரு " என்றபாடமே இப்பொருட் சிறப்பிற்கு அடிப்புலமாகின்றமை கருதத்தக்கது. தடுக்கின்ற அணையின் சுவர்களையும் மீறிப் பொங்கிப் பாயும் நீரே, இறைவனது பேரின்பப் பெருக்கிற்கு மிகுதியாகப் பொருந்துகின்றமையின், " சிறை பொரு நீர் போல் " என்ற பாடமே சிறந்து நிற்றல் கருதத்தக்கது.

ஏடெழுதுவோரால், " பொரு " என்பது " பெரு " என்று கால் (ா) நீக்கி எழுதப்பட்டிருக்க வேண்டும்; அதுவே இவ் வேறுபாட்டிற்குக் காரணம் எனல் கருதி அறியத்தக்கது.



# " முன் அமைந்த ஏடு "

நெல்லை, சிவமணி, புலவர்: திரு. ம. சிவசம்பு பிலிட்.,
துணைச்செயலாளர்,
ஸ்ரீ குருஞானசம்பந்தர் பணிமன்றம், நெல்லை.

" எட்கர்கேசி என்ற அமெரிக்கர் பிறருடைய பூர்வ ஜென்மத்தைப் பற்றிய விபரங்களை எல்லாம் எடுத்துக் கூறினர். எட்கர்கேசி மயக்கநிலையில் இருந்தபோது, இச்செய்திகளை எங்கிருந்து பெறுகிறீர் என்று கேட்ட போது ஆகாயப்பதிவுகளில் இருந்து (Aboslic Records) தெரிந்து கூறுகிறேன் " என்று அவர் கூறினர்.

— குமுதம் 3—11—83 இணைப்பு இதழ்.

இச்செய்தியைப் படித்தபோது என்னையும் அறியாமல் என் உள்ளம் திருநாவுக்கரசு சுவாமிகள், தருமபுர ஆதீன முதல்வர் ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருள் வாக்குகளை நினைந்து மகிழ்ந்தது. அதன் விளைவே இக்கட்டுரை.

அன்று எழுதியவன் அழித்து எழுதப்போவதில்லை.

நாம் செய்த நல்வினை தீவினைகளை ஆண்டவன் எழுதி வைக்கிறன்.

ஆண்டவன் அப்படியெல்லாம் எழுதுகிறன் ? எப்படி எழுதுகிறன்? எங்கே எழுதுகிறன் ? இவ்வாறு பல வினக்களைத் தொடுக்கிறோம்

இந்தக் கேள்விகளுக்கெல்லாம் விடைகூறுகிறர் திருநாவுக் கரசு சுவாமிகள். திருஇன்னம்பர் திருக்கோயிலுக்குச் செல்லு கிறர் திருநாவுக்கரசர். அங்கு இறைவன் சிறுசிறுவரிகளாய் ஏதோ எழுதிக்கொண்டிருக்கிறன். அதைப் பார்த்து மெய் சிலிர்த்து நிற்கின்றர். என்னதான் எழுதுகிறன் என்று அறிய விரும்புகிறர். அவர் எழுதுவதை உற்றுப்பார்க்கிறர்.

இறைவன் ஒருபக்கம் தூமலர்களைத்தூவித்தொழுது துதித்து நின்று, அழுது விருப்புற்று அரற்றுகின்ற மெய்யன்பர்களை

எழுதுகிருன். மற்ருெருபக்கம் வீண்பொழுது போக்கிப் புறக் கணிப்பார்களையும் எழுதுகிருன்.

இதனை நேரில்பார்த்த நாவுக்கரசு சுவாமிகள் நாம் எல்லாம் உய்யும்பொருட்டு அதனை நமக்குத் திருமுறைப்பாடல்மூலம் அறிவுறுத்துகிருர்.

தொழுது தூமலர் தூவித் துதித்து நின் (று)
அழுது காமுற்(று) அரற்றுகின் ருரையும்
பொழுது போக்கிப் புறக்கணிப் பாரையும்
எழுதுங் கீழ்க்கணக்(கு) இன்னம்பர் ஈசனே.

(கீழ்க்கணக்கு – சிறுசிறு வரிகளாய் எழுதும் குறிப்பு).

இப்பாடல்மூலம் இறைவன் எழுதுகிருன் என்பது உறுதி யாகிவிடுகின்றது. எங்கு எழுதுகிருன்? அதை நம் ஆதீன முதல்வர் ஸ்ரீ குருஞானசம்பந்தர் விளக்குகிருர்.

இறைவன் ஏட்டிலே எழுதுகிருன். இவ்வுலகில் நிகழ்ந்த நிகழும், நிகழப்போகும் அனைத்தும், பிரபஞ்சத்தில் திறந்த புத்த மாக எழுதிவைக்கப்பட்டிருக்கிறது. அதன்படியே எல்லாம் நடக்கும். நாம் செய்த நல்வினை தீவினை இவ்வேட்டில் பதிவு செய்யப்படுகிறது. அப்பதிவுப்படி இறைவன் உயிர்களைக் கூட்டுகிருன். கூட்டிப் பிரிக்கிருன். அவைகளை ஆட்டுகிருன். அவைகளை அடக்குகிருன். அவைகளுக்கு உலகத்தைக் காட்டு கிருன், பின் அதை மறைத்து முத்தி இன்பத்தை ஊட்டுகிருன். இவைகளை எல்லாம் நெற்றிக்கண்ணையுடைய இறைவன் முன் அமைந்த ஏட்டின்படித்தான்செய்கிருன் என்கிருர் ஸ்ரீ குருஞான சம்பந்தர்,

கூட்டுவதும் கூட்டிப் பிரிப்பதுவும் ஒன்ருென்றை
ஆட்டுவதும் ஆட்டி அடக்குவதும் — காட்டுவதும்
காட்டி மறைப்பதும் கண்ணுதலோன் முன்அமைந்த
ஏட்டின்படி யென்(று) இரு.

இப்பாட்டின்மூலம் நமக்கு நடப்பவையெல்லாம் முன் அமைந்த ஏட்டின்படித்தான் நடக்கிறது என்பதைத் தெளி வாக்குகிருர் ஸ்ரீ குருஞானசம்பந்தர். அதைத்தான் மேல்நாட் டார் ஆகாயப்பேரேடு என்று கூறுகிருர்கள் என்பதை நினைந்து மகிழ்வோம்.




**ஜோதிஷம் திரு. A. இராசமாணிக்கம்**

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நடுநிலைப்பள்ளி, திருப்பனந்தாள்.

(ருத்ரோத்காரிஹு மார்கழிமீ 1வ முதல் 30வ முடிய)

(16—12—1983 முதல் 14—1—1984 முடிய)

| | | | |
|---|---|---|---|
| ல/ | சந் | ரா | |
| | இராசி | | |
| | | | |
| சூ பு | கு கே | சனி சு | செ |

| | | | |
|---|---|---|---|
| கு சு | சூ | | பு |
| சனி | அம்ஸம் | | ரா செ |
| ல / கே | | | சந் |
| | | | |

ஸ்ரீ ருத்ரோத்காரிஹு மார்கழிமீ 1வ சுக்கிரவாரம் பரணி நக்ஷத்திரம் பவகரணம் கூடிய காலத்தில் சூரிய உதயம் முதல் 17 நாழிகை 41 வினடிக்கு மீனலக்கினத்தில் ஸ்ரீலோகரட்சகரான சூரியபகவான் விருச்சிகராசியிலிருந்து தனுர்ராசி சங்கிரமணமாக தேவதின விடியற்காலப்பொழுதாகப் பரிமளித்து மார்கழிமாதம் பிரவேசம் செய்தருளுகின்ருர். அன்று ஷடசீதி புண்ணியகாலமும், தனுர்மாத பூஜாரம்பமும் ஆகும். அன்றுமுதல் மாதம் பூராவும் எல்லோரும் காலை 4½ மணிக்குமுன் துயில் எழுந்து மார்கழி நீராடி ஆசாரத்துடன் ஆலயம் சென்று உஷாக்காலத்தில் தெய்வ தரிசனம் செய்வதனல் எல்லா பிரஜைகளுக்கும் இறைவன் திருவருள் பாலிக்கின்ருர். மக்களுக்கு மடிநீங்கும், திரு ஏற்படும். சகலபாக்கியங்களும் ஏற்படும். சங்கிரமகால கிரகஸ்திதியினுல் லோகில் எல்லாவகை தானியங்களும்விளைந்து எங்கும் சுபிட்சம் ஏற்படும். ஜனங்கள் ரோகமில்லாமல் சௌக்

கியமாக இருப்பார்கள். தேசங்களில் நூற்பு நெசவு ஆலைகளில் நவீனரக வஸ்திரங்களின் உற்பத்தி அதிகரித்து ஜனங்களின் தேவைக்கு வந்துசேரும். தேசங்களில் ஆளுநர்கள் மனுநீதி யாக ஆட்சிபுரிந்து பிரஜைகளை இரட்சிப்பார்கள்.

உலகிலுள்ள திருமடங்களில் ஆசாரியபீடங்களில் சிவராஜ யோகத்தில் வீற்றிருக்கின்ற சிவஞானகுருமகான்கள், குருமகா சந்நிதானங்கள் லோகத்திற்கு இறைவனின் மகத்துவம் விளம்பி அருள்வார்கள். மாந்தர்கள் சிவாலய வழிபாடு, இறைவன் நாமாவளி தோத்திரங்கள்செய்து வணங்குவதால் ஏற்படுகின்ற அருள்கடாட்சம், மனத்தூய்மை, நல்லியல்பு, பிரவிருத்திகளில் நீண்டநேரம் செயலாற்றும் திறமை, செல்வப்பெருக்கு, சுபிட்ச வாழ்வு ஆகியவற்றைத் தம் திருவாய்மலர்ந்து சொற்பொழிவு செய்து அருளிச்செய்வார்கள். தேசங்களில்எங்கும் தேவாலயங் களில் நித்தியம் ஆறுகாலபூசைகள், விசேஷ உஷாக்காலபூசை கள், திருவிழாக்கள் நடைபெறும். பக்தகோடிகள் தெய்வ சன்னதிகளில்குழுமி உஷாக்காலத்தில் ஈஸ்வரதரிசனம்செய்து ஆனந்தபரவசமாவர். சமுகத்தில் நற்கர்மங்கள் பல புரிந்து சீரியவாழ்க்கை நடத்துவர்.

## குருப்பெயர்ச்சி

குறிப்பு :- ஸ்ரீருத்ரோத்காரிஹு மார்கழிமீ 1வ சுக்கிரவாரம் சூரிய உதயம்முதல் 59 நாழிகை 38 விஞடிக்கு 17—12—83 ஸ்திர வாரப் பிராத காலத்தில் ஸ்ரீ குருபகவான் மேடாதியாய் 240 பாகையைக் கடந்து, விருச்சிகராசியிலிருந்து தனது சொட் சேத்திரமாகிய தனுர்ராசியின்முலம் முதல்மாதத்தில் பெயர்ச்சி யாகிறுர். அவர் ஒருவருஷகாலம் அவ்விராசியில் நேர்கதி அதி கார வக்கிரகதிகளில் சஞ்சரித்து லோகபிரஜைகளுக்கு அவரவர் விதிப்படிக்கு சுப பலன்களைத்தரவல்லவர். ஆயினும் அவர் ஆட்சி இடமாக இருப்பதால் அவர் தன்மையில் உலகத்திற்கு நற்பலன்களையே அளிப்பவராவார். நீதியின்படி உலகம் இயங்கும்,

அவர் தனுர்ராசியில் சஞ்சரிக்கும் காலம் மேஷம், மிதுனம், சிம்மம், விருச்சிகம், கும்பம். இவ்விராசியையுடையோருக்கு தனம், பாக்கியம், விவாகப்பிராப்தி, புத்திரப்பிராப்தி, குடும்ப சுபிட்சம், எதிலும் இலாபப்பிராப்தி, கல்வி கலைகளில் முன்னேற் றம், உத்தியோகத்தில் பதவி உயர்வு, செல்வந்தர் பிரபலஸ்தர் நட்பு, அதிகசெல்வாக்கு ஆகிய நற்பலன்கள் ஏற்படும்.

ரிஷபம், கடகம், கன்னி, தனுசு இவ்விராசியையுடையோருக்கு முன் நான்குமாதங்கள் இராசயோகமாக எல்லா காரியங்களிலும் ஜெயம், பிரசித்தம், திரண்ட சம்பத்து வந்து சேருதல் ஆகும். பின் எட்டுமாதங்கள் சாதாரண பலன்களாக நடந்துவரும்.

துலாம், மகரம், மீனம் இவ்விராசியையுடையோருக்கு வேதையில் வேறுகிரகம் இருப்பதால் வருஷம்பூராவும் நற்பலன் களையே குருவுக்குப்பதிலாக ஏற்படுத்திக்கொண்டிருக்கும்.

சாந்தி :- எல்லா இராசியை யுடையோரும் சிவாலயம் சென்று அருள்மிகு தட்சிணாமூர்த்தி சுவாமிக்கு அபிஷேக ஆராதனைகள்செய்து தரிசித்து, வேதம் ஓதுவோருக்கு சுவர்ண தானம் வஸ்திரதானம்செய்துவர சகலபாக்யங்களும் பிரபுத்துவ தோரணை பொருந்திய மேன்மை ஸ்திதியும் ஏற்படும்.

1. மேஷம் :- அசுவதி – பரணி. கார்த்திகை – ¼

( சு. சே. சோ. லா. – லி. லு. லே. லோ. – அ. )

மேஷராசி 9 பாதங்களும் சுபமான பலனைத்தரும். குடும்ப அபிவிருத்தியில் நற்பாக்கியம் பெருகும். சகோதரருக்கு அரசாங்கக் கௌரவத்தில் நல்லன ஏற்படும். மித்திரர்களின் வருகை நல்ல விஷய சம்பாஷணை மகிழ்ச்சிதரும். நல்லவஸ்துக் களின் பிராப்தியையளிக்கும். தாரசௌக்கியம் புத்திரர்களின் சௌக்கியம் நன்றாக இருந்துவரும். டிசம்பர் 16, 17, 20, 21, 26, 27, 28, 29, 30 ஜனவரி 4, 5, 6, 7, 8, 12, 13, 14 தேதிகளில் தனாதாயம், புனித க்ஷேத்திராடனம், தெய்வதரிசனம், புதிய விஷய உணர்வு, நல்லகீர்த்தி ஆகிய நற்பலன்களையளிக்கும். டிசம்பர் 31 ஜனவரி 1 இத்தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகள் மத்திமபலன்தரும்.

2. ரிஷபம் :- கார்த்திகை ¾ – உரோகிணி – மிருகசீர்ஷம் ½

( இ ஊ. ஏ. – ஒ. வ. வி. வூ. – வே. வோ. )

ரிஷபராசி 9 பாதங்களும் சுபமான பலனைத்தரும். குடும்ப அபிவிருத்தியில் பணவருமானங்கள் கணிசமாக வந்துகொண் டிருக்கும். வித்தியாவியாபாராதி கலைத்துறையில் விசேஷபலனை ஏற்படுத்திவரும். எல்லா காரியங்களும் குறிப்பிட்டவிதத்தில் வெற்றியாக நடந்துவரும். ஜனவரி 3உ அளவில் புத்திரனுக்கு ஓர் உயர்வுதரும். பந்துவில் மனவருத்தம் நீங்கிச் சந்தோஷ நிலைமை ஏற்படும். வியாதி நீங்கும். தாம்பத்திய வாழ்வில்

சுமுகம் நிலவும் டிசம்பர் 18, 19, 22, 23, 29, 30, 31 ஜனவரி 1, 7 8, 9, 10, 11, 14 தேதிகளில் தனதாயம், புதிய முயற்சி, நல்ல சம்பவம் ஏற்படும். ஜனவரி 2, 3 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன் தரும்.

3. மிதுனம் :- மிருகசீர்ஷம் ½ – திருவாதிரை – புனர்பூசம் ¾
( கா. கி. - கு. க. ஸ. ச்சா. – கே. கோ. ஹ. )

மிதுனராசி 9 பாதங்களும் மிச்சிரமான பலனைத் தரும். குடும்பாபிவிருத்தியில் பணவருமானங்களில் நல்ல நிலைமையை ஏற்படுத்திவரும். வித்தியா வியாபாராதிகளில் நற்பலன் தரும், நல்லவர் பெரியோர்களால் அனுகூலம் ஏற்படும். வீடுவாகனங்களில் நல்ல சௌகர்யம் ஆகும். வயிற்றில் வாயு வலி வந்து உடன் குணமாகும். ஸ்ரீ சுப்பிரமணியசுவாமிக்கு அருச்சனை செய்ய நலம். தாம்பத்திய வாழ்வில் சுமுகம் நிலவும். டிசம்பர் 16, 17, 20, 21, 22, 24, 25, 31 ஜனவரி 1, 2, 3, 9, 10, 11, 12, 13 தேதிகளில் தனதாயாதி நற்பலன்களையளிக்கும். ஜனவரி 4, 5 6· தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன்தரும்.

4. கடகம்:- புனர்பூசம் ¼ – பூசம் – ஆயில்யம்.
( ஹி. – ஹு. ஹே. ஹோ. ட. - டி. டு. டே. டோ. )

கடகராசி 9 பாதங்களும் சுபமானபலனைத்தரும். குடும்பாபி விருத்தியில் பெருமதிப்பில் பண வரவுகள் வந்துகொண்டிருக்கும். சிவந்த வஸ்துவின் பிராப்த்தியையளிக்கும். வித்வத்துவம் கலைத்துறைகளில் அரசாங்க கௌரவம் தரும். எல்லாகாரியங்களையும் புத்திசாதுர்யத்தில் நடத்தச் செய்யும். வாகன சுகம் திருப்தியளிக்கும். தாரபுக்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். டிசம்பர் 16, 17, 18, 19, 22, 23, 26, 27, 28 ஜனவரி 2, 3, 4, 5, 6, 12, 12, 13, 14, தேதிகளில் தனதாயம். தெய்வ தரிசனம், நல்லோர் பிரபலஸ்தர் சந்திப்பு, நல்லசம்பவம் ஏற்படும். ஜனவரி 7, 8 தேதிகள் சந்திராஷ்டம். மற்ற தேதிகளில் மத்திம பலன் தரும்.

5. சிம்மம் :- மகம் – பூரம் – உத்திரம் ¼
( ம. மி. மு. மே. – மோ. ட. டி. டு. – டே.)

சிம்மராசி 9 பாதங்களும் மிச்சிரபலனாக நடக்கும். குடும்பஅபிவிருத்தியில் பண வருமானங்கள் வரும். அடிக்கடி அவசிய செலவும் ஏற்படும். ஜனவரி 3 தேதிக்கு மேல் பூமியில் இயந்திரவாகனங்களில் நல்லனவரும். எல்லா

காரியங்களும் புனிதமாகச் செயல்பட்டுக் கொண்டிருக்கும். புத்திரர் பௌத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்து வரும். தாம்பத்தியவாழ்வில் சுமுகம் நிலவும். டிசம்பர் 18, 19, 20, 21, 24, 25, 29, 30 ஜனவரி 4, 5, 6, 7, 8, 14 தேதிகளில் தனுதாயாதி நற்பலன்களையளிக்கும். ஜனவரி 9, 10, 11 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகள் மத்திம பலன் தரும்.

6. கன்னி :– உத்திரம் ¾ – ஹஸ்தம் – சித்திரை ½

( டோ. ப. பி. – பு. ஷ. ண. ட. - பே. போ. )

கன்னியா ராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுக நடக்கும். குடும்பாபிவிருத்தியில் தனவருமானம் வந்துகொண்டிருக்கும். பொன், மணி, பூஷணம் வாங்குதல் ஆகும். வித்தியாவியாபா ராதி கலைத்துறையில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். வாகன சுகம் திருப்தியளிக்கும். பூமியில் நற்பலன் வந்து சேரும். டிசம்பர் 20, 21, 22, 23, 26, 27, 28, 31 ஜனவரி 1, 7, 8, 9, 10, 11 தேதிகளில் தனுதாயாதி நற்பலன்களையளிக்கும். டிசம்பர் 16, 17 ஜனவரி 12, 13 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திம பலன் தரும்.

7. துலாம்:– சித்திரை ½ – சுவாதி - விசாகம் ¾

( ர. ரி. – ரு. ரே. ரோ. தா. – தி. து. தே. )

துலாராசி 9 பாதங்களும் சுபமான பலனைத் தரும். குடும்ப அபிவிருத்தியில் பண வருமானம் கணிசமாக வந்து கொண்டி ருக்கும். இரத்தின பூஷணம் தரும். வீடுவாகனங்களில் நல்ல அனுபோகம் இருந்துவரும். வித்தியாவியாபாராதி கலைத்துறை களில் பிரசித்தம் ஏற்படும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்து வரும். டிசம்பர் 16, 17, 22, 23, 24, 25, 29, 30 ஜனவரி 2, 3, 9, 10, 11, 12, 13 தேதிகளில் தனுதாயாதி நற்பலன் களை யளிக்கும். டிசம்பர் 18, 19 ஜனவரி 14 இத்தேதிகள் சந்தி ராஷ்டமம். மற்றதேதிகளில் மத்திமபலன் தரும்.

8. விருச்சிகம் :– விசாகம் ¼ – அனுஷம் – கேட்டை.

( தோ. – ந. நி. நு. நே. – நோ. ய. யி. யு. )

விருச்சிகராசி 9 பாதங்களும் மேலான பலனை அளிக்கும். குடும்பாபிவிருத்தியில் பணவருமானம் பெருமதிப்பில் வரும். வித்துவத்துவம் கலைத்துறைகளில் பிரபலஸ்திதியாகும். எல்லா காரியங்களும் இராஜகண்யத்தில் சிறப்புற நடந்துகொண் டிருக்கும். பூமியில் இயந்திரசாதனங்களில் அபிவிருத்தி இருந்து

வரும். டிசம்பர் 16, 17, 18, 19, 24, 25, 26, 27, 28, 31 ஜனவரி 1, 4, 5, 6, 12, 13, 14 தேதிகளில் தனுதாயம், நல்ல கௌரவம் காரியஜெயம் ஏற்படும். டிசம்பர் 20, 21 தேதிகள்சந்திராஷ்டமம் மற்ற தேதிகளில் மத்திமபலன் தரும்.

9. தனுசு :- மூலம் - பூராடம் - உத்திராடம் ¼
( யே, யோ. பா. பி. - பு. த. ப. ட. - பே. )

தனுர்ராசி 9 பாதங்களும் மிச்சிரபலனாக நடக்கும். குடும்பா பிவிருத்தியில் நல்ல தனவருமானம் வரும். சுபவிசேஷங்களில் செலவும்செய்யும். சகோதரருக்கு உயர்வுதரும். வித்துவத்துவம் கலைத்துறைகளில் நன்மதிப்பும் அரசாங்கம்பிரபலஸ்தார்களால் கௌரவிக்கப்படுதலும் ஆகும். வீடு வாகனங்களில் நல்ல அனுபோகம் தரும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்றாக இருந்து வரும். டிசம்பர் 18, 19, 20, 21, 26, 27, 28, 29, 30 ஜனவரி 2, 3, 7, 8, 14 தேதிகளில் தனுதாயாதி நற்பலன்களையளிக்கும். டிசம்பர் 22, 23 தேதிகளில் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன் தரும்.

10. மகரம் :- உத்திராடம் ¾ - திருவோணம் - அவிட்டம் ½
( போ. ஜ. ஜி. - கி. கு. கே.கோ.கா. கி· - )

மகரராசி 9 பாதங்களும் மிச்சிரபலனாக நடக்கும். குடும்பா பிவிருத்தியில் தனவருமானம் வரும். சகோதரர் பந்துமித்திரர் களின் உயர்வுக்கு பிரயத்தனமும் பொருட்செலவும் ஆகும். எல்லா விஷயங்களிலும்மனத்திருப்தியளிக்கும். நல்லோர் பெரியோர் பிரபலஸ்தர்களின் நட்பும் உயர்ந்தஸ்திதியும் ஏற்படும், தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்றாக இருந்து வரும். டிசம்பர் 20, 21, 22, 23, 29, 30, 31 ஜனவரி 1, 4, 5, 6, 14 தேதிகளில் தனுதாயாதி நற்பலன்களையளிக்கும். டிசம்பர் 24, 25 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன் தரும்.

11. கும்பம் :- அவிட்டம் ½ - சதயம் - பூரட்டாதி ¾
( கு. கே, - கோ. ஸ. ஸி. ஸு. - ஸே. ஸோ. தா. )

கும்பராசி 9 பாதங்களும் சுபமானபலனைத்தரும். குடும்பாபி விருத்தியில் பணவருமானம் இராஜகண்யமாக வரவாகிக் கொண்டிருக்கும். வித்தியாவியாபாராதிகளில் கலைத்துறையில் பிரபல ஸ்திதியும் நல்ல பிரயோஜனம் வந்துசேரும். தாரசௌக் கியம் புத்திரர்களின் சௌக்கியம் நன்றாக இருந்து வரும். டிசம்பர் 16, 17, 22, 23, 24, 25, 31 ஜனவரி 1, 2, 3, 7, 8, 12, 13 தேதிகளில் தனுதாயாதி நற்பலன்களையளிக்கும். டிசம்பர் 26, 27 28தேதிகள் சந்திராஷ்டமம். மற்றதேதிகளில் மத்திமபலன்தரும்.

12. மீனம்:- பூரட்டாதி ¼ - உத்திரட்டாதி - ரேவதி.
( தி. - து. ஸ. ச. த. - தே. தோ. ச. சி. )

மீனராசி 9 பாதங்களும் சுபமான பலனைத்தரும். குடும்பா பிவிருத்தியில் பணவருமானங்களும் நல்ல ஸ்திதியை ஏற்படுத்தும். வித்துவத்துவம் கலைத்துறைகளில் நற்கியாதி ஏற்படும். அரசாங்க கௌரவம் தரும். வீடுவாகனங்களில் நவீனம் ஏற்படும். புண்ணிய க்ஷேத்திரம் செல்லுதல் தெய்வதரிசனம் செய்தல் ஆகும். டிசம்பர் 18, 19, 24, 25, 26, 27 ஜனவரி 2, 3, 4 5, 6, 9, 10, 11, 14 தேதிகளில் தனுதாயம் நல்லோர் சந்திப்பு நற்புகழ் ஏற்படும். டிசம்பர் 29, 30 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன் தரும்.

## திருமுறை மாநாடு



மயிலாடுதுறை தெய்வத் தமிழ்மன்றத்தின் சார்பில் 1984 ஜனவரி 7, 8 இருநாட்களும் சைவசமய மன்றங்களின் இணைப்பு மாநாடும், திருமுறை மாநாடும், நடைபெற இருக்கின்றது.

தருமபுர ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள், திருவாவடுதுறைஆதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம்அவர்கள், திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் சுவாமிகள், தவத்திரு குன்றக்குடி அடிகளார், கௌமாரமடம் தவத்திரு சுந்தரசுவாமிகள், ஊரன் அடிகள் ஆகியோர் அருளுரை வழங்கவும்; மகாவித்வான். தண்டபாணி தேசிகர், க. வெள்ளைவாரணனுர், அ. ச. ஞானசம் பந்தன், டாக்டர். ஔவை. து. நடராஜன் மற்றும் பல சைவப் பேரறிஞர்கள் சிறப்புரையாற்றவும் இருக்கின்ருர்கள். தமிழக சமய, திருமுறை மன்றங்களின் உறுப்பினர்களும் கலந்துகொள் கின்ருர்கள். தங்கும் வசதி, உணவு வசதி, வேண்டுவோர் கீழ்க்கண்ட முகவரிக்குத் தொடர்பு கொள்ளவும்.

இவ்வண்ணம்.

**தெய்வத் தமிழ் மன்றம், மயிலாடுதுறை.**

**இரா. இராஜசேகரன்** பி. எஸ்சி. பி. எல்.
செயலர்,
"தாசில்பண்ணை" மேலையூர்-பூம்புகார் 609107.

தருமையாதீனம்

ஸ்ரீ அஷ்டாதசபுஜ மகாலக்ஷ்மி துர்க்காபரமேசுவரி ஆலய

# மகாமண்டபத் திருப்பணிக்கு

# காணிக்கை செலுத்தியவர்கள் விபரம்

( மலர் 42, இதழ் 11, பக்கம் 575 இன் தொடர்ச்சி )

| | | | |
|---|---|---|---|
| | முன்வரவு | ...ரூ. | 28136 |
| 143 | திருமதி. மீனுட்சிசுந்தரசிவை. சென்னே | ... | 101 |
| 144 | செல்வி பிரியைகாந்தி. சென்னே. | ... | 101 |
| 145 | செல்வி ரத்னுசெல்வராஜ். சென்னே | ... | 101 |
| 146 | திருமதி மஞ்சுளா. சென்னே | ... | 25 |
| 147 | திருமதி ஜெயா | ... | 25 |
| 148 | திருமதி கஸ்தூரிதாமோதரன் சென்னே | ... | 25 |
| 149 | திருமதி கற்பகம் ஷண்முகசுந்தரம் சென்னே | ... | 25 |
| 150 | திருமதி தேனுர்மொழி சென்னே | ... | 211 |
| 151 | திருமதி வசந்தா சீனுவாசன் சென்னே | ... | 11 |
| 152 | செல்வி பிரமிளா சென்னே | ... | 11 |
| 153 | செல்வி R. சம்யுக்தா சென்னே | ... | 11 |
| 154 | திருமதி சரஸ்வதிரமணன் சென்னே | ... | 11 |
| 155 | பாலகிருஷ்ண முதலியார் சென்னே | ... | 11 |
| 156 | T. V. நாகராஜன் மன்னம்பந்தல் | ... | 25 |
| 157 | N. M. பாவாடைராய முதலியார் திட்டக்குடி | ... | 11 |
| 158 | J. விநாயக மூர்த்தி | ... | 1001 |
| 159 | வேம்புசன்ஸ் திருச்சி | ... | 101 |
| 160 | N. திருஞானசம்பந்த குருக்கள் திருச்சி | ... | 201 |
| 161 | S. G. குஞ்சம்மாள் சுவாமிமலே | ... | 25 |
| 162 | A. முத்துக்குமரன் திருச்சி | ... | 200 |
| 163 | A. வெங்கடாசலம் திருச்சி | ... | 200 |
| 164 | வண்ணக்கோவன் பழனி | ... | 5 |
| 165 | இரா சிவலிங்கம் பண்ருட்டி | ... | 15 |
| 166 | மா இராஜவேல் பண்ருட்டி | ... | 5 |
| 167 | T. சுப்புலட்சுமி தருமபுரம் | ... | 101 |
| 168 | M. ஞானசம்பந்தம் மயிலாடுதுறை | ... | 100 |
| 169 | S. பெருமாள்சாமி நாடார் மயிலாடுதுறை | ... | 101 |
| 170 | S. கோவிந்த முதலியார் மணக்குடி | ... | 101 |
| 171 | T. S. சோமசுந்தரம் சென்னே | ... | 10 |
| 172 | M. சீனுவாசன் சென்னே | ... | 15 |

| | | |
|---|---|---|
| 173 | கா. ம. கண்ணப்பன். தருமபுரம் ... ரூ. | 108 |
| 174 | A. M. துரைராஜபிள்ளை வயிரமாளிகை திண்டுக்கல் | 100 |
| 175 | P. தங்கமுத்துப்பிள்ளை திண்டுக்கல் ... | 100 |
| 176 | M. காசிநாதன் அட்வகேட் திண்டுக்கல் ... | 100 |
| 177 | M. V. முத்துவீரப்பிள்ளை திண்டுக்கல் ... | 100 |
| 178 | P,கணேசன் திண்டுக்கல் ... | 100 |
| 179 | கமலா ஞானசம்பந்தம் பூம்புகார் ... | 25 |
| 180 | S. T. ஞானசம்பந்தம் சிறுமுகை கோவை ... | 101 |
| 181 | டாக்டர் G. விஸ்வநாதன் ஸ்ரீரங்கம் ... | 100 |
| 182 | R. சாந்தி அம்மாள் சென்னை ... | 301 |
| 183 | V. S. கிருஷ்ணன் சென்னை ... | 10 |
| 184 | இரா. இளங்கோ சென்னை ... | 100 |
| 185 | K. சிவசங்கரஞ்செட்டியார் சென்னை ... | 101 |
| 186 | R. சாரதாம்பாள் காட்டுமன்னார்குடி ... | 200 |
| 187 | S. தியாகராஜன் சென்னை ... | 50 |
| 188 | பொ. மாணிக்கவாசகம் திருச்சி ... | 5 |
| 189 | S. A. சபாபதி செட்டியார் மயிலாடுதுறை ... | 100 |
| 190 | வித்துவான் கு. சுந்தரமூர்த்தி எம்.ஏ., திருப்பனந்தாள் | 101 |
| 191 | R. S.சுப்பிரமணியன் அட்வகேட் சென்னை ... | 25 |
| 192 | கோ. செல்வமுத்துக்குமாரன் & கோ. ஜெயந்திஆக்கூர் | 10 |
| 193 | இல. வயித்தியலிங்கம் காரைக்குடி ... | 10 |
| 194 | வடிவேல்பிள்ளை திருவையாறு ... | 75 |
| | ஆக கூடுதல் ... | 32754 |



---

## சிலைத் திருடனே! சிந்தி!

வைத்தீஸ்வரன் கோவில் திருட்டைப் பற்றிய கட்டுரை மிகவும் அருமை. தெய்வமே இல்லை என்று எண்ணி வந்த எனக்குக்கூடக் கொஞ்சம் மனம் நெகிழ்ந்துவிட்டது. சிலைத் திருடர்களுக்கு இது ஒரு படிப்பினை.

—ராஜபாளையம் அழகு கோமதி.

நன்றி. — குமுதம் 3—11—83.

# செய்திகள்

## ஆயில்யத்திருநாள் ஆலய வழிபாடு

திருவஞ்சைக்களத்தில் :

மாதந்தோறும் நிகழ்ந்து வரும் தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் ஜன்ம நட்சத்திரத் திருநாட்களில்தேவாரத்திருப்பதிகங்கள்பெற்ற சிவதலங்களில்முறையே சிறப்பு வழிபாடுகள் நிகழ்த்தப்பெற்று வருகின்றன. இம்மாதம் 26—11—83 சனிக்கிழமையன்று மலைநாட்டுத் தலமாகிய திருவஞ்சைக்களத்தில் வழிபாடு நிகழ்ந்தது. கோவை ஸ்ரீ குருஞான சம்பந்தர் பணிமன்றத்தலைவர் திரு. இராம. ஏகப்பன் அவர்களும் துணைத்தலைவர் திரு. பழனியப்பச் செட்டியார் அவர்களும், அமைப்பாளர் திரு. பாலசுப்பிரமணியன் அவர்களும். எர்ணுகுளம் சிவபக்தர் திரு. ஏ. கே. கருப்பசாமி செட்டியார் அவர்களும் மற்றும் அன்பர்பலர் வழிபாட்டில் கலந்துகொண்டனர்.

திரு. இராம. ஏகப்பன் அவர்கள் வழிபாட்டு அன்பர்களைக் கோவையிலிருந்து தமது தனி உந்து வண்டியில் அழைத்துச் சென்று, உணவு உறையுள் வழங்கியும் அபிஷேகப் பொருள்கள் முதலியன அளித்தும் பெருமைசெய்தார்.

திரு. பழனியப்பச் செட்டியார் திருமுறை இன்னிசைவாணர்களை அழைத்துவந்து தேவாரப் பாராயணம் செய்வித்துச் சிறப்பித்தார்.

எர்ணுகுளம் திரு. ஏ, கே. கருப்பசாமிசெட்டியார் அவர்கள் மிகுதியான அளவில் பால், தயிர். இளநீர் முதலிய பொருள்களைக் கொண்டுவந்து அபிஷேகவிழா நன்கு நடைபெற உதவினர்.

திரு. பாலசுப்பிரமணியன் அவர்களும் கோவை சேக்கிழார் மன்றத்தினரும் வழிபாடு இனிது நிகழ இயன்ற உதவிகள் பலவும் புரிந்தனர். சுந்தரமூர்த்தி சுவாமிகள் இந்திரன், திருமால், பிரம்மன் முதலானோர் எதிர்கொள்ள சேரமான்பெருமாள்நாயனருடன் திருக்கயிலை சென்ற திருத்தலமாதலால் இத்தலவழிபாடு மிகச் சிறந்த அளவில் செய்விக்கப்பெற்றது.

இருபத்தாறு வெடிமுழக்கங்களுடன் அபிஷேக ஆராதனைகளுடன் இத்திருத்தல வழிபாடு இனிது நிகழ்ந்தது. விநாயகர், முருகன், சுவாமி, அம்பாள், நடராஜர், சிவகாமி, சுந்தரர், சேரமான்பெருமாள் முதலிய அனைத்து மூர்த்திகளுக்கும் அபிஷேக ஆராதனைகள் செய்வித்துப் பட்டு பரிவட்டங்கள் சார்த்தச்செய்து வழிபாடு நிகழ்த்தப்பெற்றது. திருவஞ்சைக் களத் தேவாரத் திருப்பதிகம் தலவரலாற்றுச் சிறப்புடன் வெளியிடப்பெற்றது. ஆதீனச்சார்பில் வித்துவான் திரு. வி. சா. குருசாமி தேசிகர் வழிபாட்டைச் சிறப்புற நடத்திவந்தார்,

வரும் ஆயில்யவிழா 23—12—83 வெள்ளிக்கிழமை காலை கொங்குநாட்டுத் தலமாகிய திருமுருகன்பூண்டியிலும், மாலை திருஅவிநாசியிலும் நிகழ உள்ளது.

## குருவருளும் அருளுபதேசமும்

தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தை அன்பர்கள் வணங்கி வழிபட்டு அருளுபதேசம் பெறும் பிரார்த்தனை வழிபாட்டுக் கூட்டம் ஒவ்வொரு ஆங்கிலமாத முதல் ஞாயிறன்றும் நிகழ்ந்துவருகிறது. இம்மாதம் 4—12—83 அன்று 32ஆவது வழிபாட்டுக்கூட்டம் நிகழ்வுற்றது. முதலில் கூட்டுப்பிரார்த்தனையும் அடுத்துத் தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீகுருமகாசந்நிதானத்தின் அருளுபதேசமும் நிகழ்வுற்றன.

இம்மாதம் திருத்தொண்டர் புராணச் சிந்தனையாக மானக்கஞ்சாறர், அரிவாள்தாயர் புராணங்கள்உபதேசிக்கப்பெற்றன, திருத்தொண்டத்தொகையின் அமைப்பையும், அழகையும்மனங்கொளச்செய்த குருமணிகள் புராணச்சிந்தனையாகக் கேவல. சகல, சுத்தான்மாக்கள் பற்றிய தத்துவ விளக்கம் அருளினார்கள். மானக்கஞ்சாறர் புராணத்தில் 'மழைக்குதவு பெருங்கற்பின் மனைக்கிழத்தி' என்ற தொடரைப் பல மேற்கோள்களுடன்விளக்கி,தருமையாதீனம் 14ஆவதுகுருமணிகள் ஸ்ரீகந்தப்ப தேசிகர் அருள் வரலாற்றுடன் இயைத்துக்காட்டியமை மிகவும் பொருத்தமாக இருந்தது. அரிவாட்டாயர் புராணம் அருளுகையில் நல்ல பொருள்களை இறைவனுக்கு என வைக்கும் உயர்ந்த பண்பு, மக்களிடையே மலரவேண்டும் என விளக்கினார்கள். நாயனார் வரலாறுகளில் பொதிந்துள்ள சைவசித்தாந்தக் கோட்பாடுகளைப் புலப்படுத்தி மனித சமுதாயம் ஆற்றவேண்டிய பணிகள்பற்றி உபதேசித்தருளினார்கள்.

மயிலாடுதுறைப் பெருமக்களும் அன்பர்களும் கலந்துகொண்டு பயன்பெற்றனர். அடுத்து 33 ஆவது அருளுபதேசம்

1—1—84 அன்று நிகழ இருக்கின்றது. அன்பர்கள் கலந்து கொண்டு. ஆன்ம நலம் பெறுவார்களாக.

## வேதநாயகம்பிள்ளைசிலை திறப்புவிழா

முதல் தமிழ் நாவல் ஆசிரியரும், விற்பன்னரும், கவிஞரும், நீதிபதியும் ஆகிய வேதநாயகம்பிள்ளைசிலை திறப்பு விழா, மயிலாடுதுறை புனித சாவேரியார் ஆலய வளாகத்தில் 7-12-83 மாலை 6-30 மணியளவில் நிகழ்வுற்றது. தஞ்சை ஆயர் மேதகு. இரா. ஆ. சுந்தரம் ஆண்டகை டி.டி., எல். சி. எல்., எம், ஏ., சிலையைத் திறந்துவைத்தார்கள். சிலை திறப்புவிழாநிகழ்ச்சிக்குத் தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் தலைமை ஏற்றார்கள். தவத்திரு. குன்றக்குடி அடிகளார், " தாய் " வார இதழ் ஆசிரியர் திரு. வலம்புரிஜான் எம். எல். சி., கவிஞர் அமலன், திரு. பால்ராஜ் முதலியோர் உரையாற்றினர். திருவாவடுதுறை ஆதீனச் சார்பாக வித்துவான் திரு. மு. சுந்தரேசம் பிள்ளை கலந்துகொண்டு உரையாற்றினர். தஞ்சை மேதகு. ஆயருக்குத் திருவாவடுதுறை ஆதீனச் சார்பில் பட்டாடை அணிவிக்கப்பெற்றது. தருமை ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம், தம் தலைமை உரையில், "வேதநாயகம்பிள்ளை தமிழ், இலக்கியத்தின் வாயிலாக சமயப்பொறையை வளர்த்தவர் என்று அருளி, வேதநாயகம்பிள்ளையின் பெண்மதிமாலைநூலில்கூறப்பட்டுள்ள கருத்துக்கள் பெண்மைநலம் பெருக வழிகாட்டுவன என விளக்கினார்கள். கிறித்துவ - இந்து சமயத் தலைவர்கள் கலந்து கொண்ட இவ்விழா ' மொழி – இலக்கியங்கள், சமய பேதங்களை நீக்கி மக்களை ஒன்று படுத்தும், என்ற உண்மையை உணர்துவதாய் அமைந்திருந்தது.

## கந்த சஷ்டி விழா

*தருமையாதீனத்தில் :*

அருள்மிகு முருகப்பெருமானுக்குரிய திருநாட்களுள் மிகச் சிறந்ததாகக்கொண்டாடப் பெறுவது கந்தசஷ்டி விழா. இவ்வாண்டு இவ்விழா 5—11—83 முதல் 10—11—83 முடிய மிகச் சிறப்பான முறையில் நிகழ்வுற்றது. ஆதீனத்தில், ஆன்மார்த்த மூர்த்தி ஸ்ரீசொக்கலிங்கப் பெருமான் வழிபாட்டுடன் ஸ்ரீ முருகப் பெருமானுக்கும் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் சிறப்பு வழிபாடு நிகழ்த்தினார்கள். தருமையாதீனத் தமிழ்ப்புலவர், திருவாசகஉரைமணி, ஆதீனப்பல்கலைக் கல்லூரி முதல்வர் வித்துவான் திரு. வி. சா. குருசாமிதேசிகர் எம். ஏ., அவர்கள்

சொக்கநாதப் பெருமான் பூசைமடத்தில் கந்தபுராண விரிவுரை நிகழ்த்தினர். விரிவுரையின்போது ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் எழுந்தருளியிருந்தார்கள். ஆதீன அடியவர்களும், அலுவலர்களும், அன்பர்களும் சொற்பொழிவைக்கேட்டுப் பயனுற்றனர்.

ஆதீன தேவஸ்தானங்களில் :

தருமையாதீனத்திற்குச் சொந்தமான சீகாழி, திருப்பனந்தாள், திருவையாறு, திருபுவனம், திருக்கடவூர், வைத்தீசுவரன் கோயில், மயிலாடுதுறை - குமரக்கட்டளை, பேரளம் முதலிய திருக்கோயில்களில் ஸ்ரீ முருகப்பெருமானுக்குச் சிறப்பு வழிபாடுகளுடன் 5—11—83 முதல் 10—11—83 வரை தக்க புலவர்களைக் கொண்டு கந்தபுராண விரிவுரைகள் நிகழ்த்துவிக்கப் பெற்றன.

சீகாழி ஸ்ரீ சட்டைநாதசுவாமி திருக்கோயிலில் திரு. த. அகரமுதல்வன் எம். ஏ., அவர்களும் திருப்பனந்தாள் ஸ்ரீ அருணஜடேசுவரசுவாமி தேவஸ்தானத்தில் திரு. தா. ம. வெள்ளைவாரணம் அவர்களும், திருவையாறு ஸ்ரீ பஞ்சநதீசுவரசுவாமி திருக்கோயிலில் வித்துவான் திரு. சுவர்ணகாளிசுவரன் அவர்களும், திருபுவனம் ஸ்ரீ கம்பகரேசுவரசுவாமி திருக்கோயிலில் வித்துவான் திரு. மு. கோவிந்தராசன் அவர்களும், திருக்கடவூர் ஸ்ரீ அமிர்தகடேசுவரசுவாமி திருக்கோயிலில் வித்துவான் திரு. கா. ம. கண்ணப்பன் எம். ஏ., அவர்களும், வேளூர் ஸ்ரீ வைத்தியநாதசுவாமி திருக்கோயிலில் வித்துவான் திரு. சொ. முத்தையன் எம். ஏ., அவர்களும், மயிலாடுதுறைகுமரக்கட்டளை ஸ்ரீசுப்பிரமணியசுவாமி திருக்கோயிலில் தருமையாதீனத் தமிழ்ப் புலவர் டாக்டர். திரு. சொ. சிங்காரவேலன் எம். ஏ., பி. எச்டி., அவர்களும், பேரளம் ஸ்ரீ சுயம்புநாதசுவாமி தேவஸ்தானத்தில் வித்துவான் திரு. சு. மு. சுந்தரராஜன் எம். ஏ., அவர்களும் கந்தபுராண விரிவுரையாற்றினர். பார்வதி திருமணம், முருகன் திருவவதாரம், அசுரர்ஆட்சி, வீரவாகுதேவர்தூது, சூரசம்காரம், இருபெருந்தேவியர் திருமணம் என்னும் தலைப்புக்களில் கந்தபுராண விரிவுரைகள் நிகழ்வுற்றன. அவ்வத்தலத்தில் பக்தர்கள் திருக்கோயிலுக்கு வந்து பெருமானைத் தரிசித்தும் பெருமான் புகழ் கேட்டும் இன்புற்றனர்.

வைத்தீசுவரன்கோயில் எனவழங்கும் வேளூர் ஸ்ரீவைத்தியநாதசுவாமி தேவஸ்தானத்தில் ஸ்ரீ செல்வமுத்துக்குமர சுவாமிக்கும் மயிலாடுதுறை குமரக்கட்டளை ஸ்ரீசுப்பிரமணியசுவாமிக்கும் கந்தசஷ்டிவிழா ஆறுநாட்களும் விசேஷ அபிஷேக அலங்கார

ஆராதனைகளும் திருவீதியுலாக் காட்சியும் நிகழ்வுற்றன. குமரக் கட்டளை ஸ்ரீ சுப்பிரமணியசுவாமிக்கு இலட்சார்ச்சனை நடை பெற்றது. அன்பர் பலர் தரிசித்து இன்புற்றனர்.

## கடைமுழுக்கு விழா

தருமையாதீனத்திற்குச் சொந்தமான மயிலாடுதுறை வள்ள லார்கோயில் ஸ்ரீ வதான்யேசுவர சுவாமி திருக்கோயிலில் கடை முழுக்கை இறுதியாகக் கொண்ட பத்துநாட்கள் துலாஉற்சவம் நடைபெற்றது. நாள்தோறும் பஞ்சமூர்த்திகள் வீதியுலாவும் 16-11-83 கடைமுழுக்கன்று தீர்த்தம்கொடுத்தருளலும் சிறப்பாக நிகழ்வுற்றன. அன்பர்கள் தீர்த்தமாடித் திருவருள்பெற்றனர்.

## கார்த்திகை ஞாயிறு தீர்த்த விழா

தருமபுர ஆதீனத்திற்குச் சொந்தமான கருங்குயில்நாதன் பேட்டை அருள்மிகு ஆனந்தவல்லி உடனுகிய அருள்மிகு சக்திபுரீசுவரசுவாமி கார்த்திகை ஞாயிறுதோறும் அம்மையுடன் தருமபுரத்தின் காவிரி வடகரைக்கு எழுந்தருளித் தீர்த்தம் கொடுத்தருளல் சிறப்பாக நிகழ்வுற்றது. மயிலாடுதுறையைச் சார்ந்துள்ள பக்தர்கள் இவ்விழாவிற் கலந்து கொண்டு தீர்த்த மாடி இறையருள்பெற்றனர்.

தருமையாதீனத்திற்குச் சொந்தமான குத்தாலம் என வழங் கும் திருத்துருத்தி அருள்மிகு அரும்பன்னவனமுலையம்மை உடனுகிய அருள்மிகு சொன்னவாறுஅறிவார் கார்த்திகை ஞாயிறுதோறும் அம்மையுடன் பஞ்சமூர்த்திகளும் காவிரிக்கு எழுந்தருளித் தீர்த்தம்கொடுத்தருளல்விழா சிறப்பாக நிகழ்வுற் றது. அன்பர்பலர் தீர்த்தமாடித் திருவருள் பெற்றனர்.

## திருக்கடவூரில் சங்காபிஷேகம்

தருமையாதீனத்திற்குச் சொந்தமான திருக்கடவூர் ஸ்ரீ அமிர்தகடேசுவர சுவாமி தேவஸ்தானத்தில் கார்த்திகைச் சோமவார நாட்களில் 1008 சங்காபிஷேகம் மிகச் சிறப்பாக நடைபெற்றது. கார்த்திகைச் சோமவார நாட்களில் தருமை யாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் எழுந்தருளி வழிபா டாற்றி, பக்தர்களுக்குச் சங்காபிஷேக தீர்த்தம், பிரசாதம் வழங்கியருளினுர்கள். பக்தர்கள் திரளாக வந்து வழிபட்டனர்.

காவிரி முதலிய புண்ணிய தீர்த்தங்களைக் கொணர்ந்து அத் தீர்த்தத்தில் இருநூற்றைம்பதுக்கு மேற்பட்ட பொருள்களைக்

கலந்து சங்குகளில்நிரப்பி, வரிசையாகப்பரப்பிவைத்து, நடுவில் உள்ள பீடத்தில் வலம்புரிச்சங்கை வைத்து வேள்வி முதலிய வற்றால் பூசித்து, அச்சங்குகளில் உள்ள தீர்த்தத்தை முறைப்படி பெருமானுக்கு அபிஷேகம் செய்வது சங்காபிஷேகம் ஆகும். இவ்வாறு இறைவனுக்குச் சங்காபிஷேகம் செய்வதால் உலக நலம் உண்டாகும்.

## நாயன்மார் குருபூஜைத்திருநாள்

தருமையாதீனத்திற்குச் சொந்தமான ஸ்ரீ ஞானபுரீசுவர சுவாமி திருக்கோயிலில் கார்த்திகைக் கார்த்திகைநாளில் (20-11-83) கணம்புல்லர் திருநாளும், உத்திரநாளில் (29-11-83) மெய்ப்பொருள் நாயனார் திருநாளும், அஸ்தநாளில் (30-11-83) ஆனாயர் திருநாளும், மூலநாளில் (5-12-83) மூர்க்கநாயனார் திருநாளும், பூராடநாளில் (7-12-83) சிறப்புலிநாயனார் திருநாளும் சிறப்பாக நடைபெற்றன. குருபூசை நாட்களில் ஸ்ரீ நடராசப் பெருமானுக்கு அர்ச்சனை வழிபாடுகள் நிகழ்த்தப்பெற்றன. வித்துவான் திரு. கா. ம. கண்ணப்பன் எம். ஏ., அவர்கள் புராணம் வாசித்து வரலாறு கூறினார். தேவார பாடசாலை, ஆகம பாடசாலை ஆசிரியர்களும் மாணவர்களும் அன்பர்களும்கலந்து கொண்டனர். விரிவுரைக்குப்பின் அன்பர்கட்குப் பிரசாதம் வழங்கப்பெற்றது.

## ஸ்ரீ குருஞானசம்பந்தர் பாலர்பள்ளி, தருமபுரம்.

தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் அருள்ஆசி துணைக்கொண்டு, ஸ்ரீ குருஞானசம்பந்தர் பாலர் பள்ளி, தருமபுரம் கயிலாயநிலையத்தில் 16-10-83 விஜய தசமியன்று தொடங்கப்பெற்றுள்ளது. கல்வி, ஒழுக்கம், உடற்பயிற்சி, இனிமையாகப்பேசும் பழக்கம், கலை, சமயம், நல்ல பழக்கவழக்கம் முதலியவற்றைச் சிறுவயதிலேயே கற்பிக்கவேண்டும் என்னும் உயர்ந்த நோக்கத்துடன் தொடங்கப்பெற்றுள்ள இப்பாலர்பள்ளியில் பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளைச் சேர்த்துப் பயன்பெறுவார்களாக. தமிழ் ஆங்கிலம் ஆகிய மொழிகளில் கற்பிக்கப்படும். மூன்று வயதான ஆண், பெண் குழந்தைகள் சேர்த்துக் கொள்ளப்பெறுவர். **மாதக் கட்டணம் ரூ. 10—00.**

---

# கடவூரில் கலயன்

வித்துவான் திரு. கா. ம. கண்ணப்பன் எம். ஏ.,

[தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் 6—11—83 ஆங்கில மாத முதல் ஞாயிறன்று வழங்கிய அருளுபதேசத்தை ஒட்டி எழுதப்பெற்ற கட்டுரை]

அன்று கந்தசஷ்டி இரண்டாம்நாள். ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானத்தில் சொக்கலிங்கப் பெருமான் வழிபாட்டோடு, ஸ்ரீ முருகப்பெருமானுக்கும் சிறப்பு வழிபாடு நிகழ்த்தினுர்கள்; அவர்கள் கந்தசஷ்டி விரதம் அனுட்டிக்கிருர்கள். தமது அருளாட்சிக்கு உட்பட்ட தேவஸ்தானங்களில் முருகப்பெரு மானுக்குச் சிறப்பு வழிபாடுகள் செய்வித்தும் கந்தபுராண விரிவுரைகள்மூலம் முருகப்பெருமான் புகழை மக்களுக்கு உணர்த்தியும் அவர்கள் ஆற்றிவரும் சமயத்தொண்டுகள் ஏராளம்.

அடியேன் காலை 9-30க்கெல்லாம் ஆதீனத்திருமடத்திற்குப் புறப்பட்டேன். 'இன்னும் அரைமணிநேரம் இருக்கிறதே' நூலகத்துள் நுழைவோம்என்ற எண்ணம். நூலகத்தின் உள்ளே செல்ல எண்ணிப்படிகளில் கால்வைத்தேன். மேலேபார்த்தேன் நூலகம் அமைந்துள்ள திருநெறிய தெய்வத்தமிழ் மன்றத்தில் சுவரின்மேற்புறம் இருக்கும் வண்ணஓவியங்கள் பக்திப்பரவசம் ஊட்டுவன. ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணிகள் கயிலாய யாத்திரையின்போது கண்ட காட்சிகளும், வழிபடும் காட்சிகளும்-நேரில் காண்பதுபோல் பளிச்சிட்டன. ஓவியம் ஒவ்வொன்றிலும் 'இது இன்ன பகுதி' என எழுதியும் வைத்திருப்பது நம்மை அந்த இடத்திற்கே அழைத்துச் செல்வதுபோன்று இங்கிதமாய் இருக்கிறது. பார்த்துக் கொண்டிருக்கும்போதே அன்பர்கள் திருமடத்தினுள் செல்லும் காட்சி கண்ணில் பட்டது.

மணிபத்து. குருமணிகள், உபதேசம் பெறுவதற்காக வரும் அன்பர்களை எண்ணி, சரியாகப் பத்துமணியளவில் பிரார்த்தனை தொடங்க ஆணையிட்டருளுகிருர்கள்.

கூட்டுப் பிரார்த்தனை பஞ்சாட்சரம் ஓதுவதோடு நிறைகிறது குருமணிகள் உபதேசிக்கத் தொடங்குகிருர்கள்.

" இன்று பூசலார் நாயனுர் குருபூஜை. திருநின்றவூரில் அவதரித்தவர்; அந்தணர் மரபினர்; "

" இன்று ' குங்குலியக் கலயர் ' பற்றியல்லவோ சிந்தனே! குருமணிகள் பூசலார் வரலாற்றை அருளுகின்ருர்களே " என்ற எண்ண ஓட்டம் அடியேனே ஆட்கொண்டது. நாயன்மார் குருபூசைத் திருநாள் முதல் ஞாயிறுகளில் வாய்க்குமாஞல் அந் நாளில் நாயன்மார் வரலாறுகூறி நினைவுபடுத்துவதை – நெறிப் படுத்துவதை குருமணிகள் வழக்கமாகக்கொண்டுள்ளார்கள்.

மேலும்சில குறிப்புக்களே அருளுகிருர்கள். பூசலார்நாயனுர் அவதரித்தது திருநின்றவூர்; திருவள்ளுருக்கு அருகில் ஏறத்தாழ 10. கி. மீ. தொலேவில் உள்ளது. மயிலாடுதுறைக்கு அருகில் இருப்பது திருநின்றியூர். இரண்டும் இலட்சுமி பூசித்த தலங்கள். இவ்வாறு திருநின்றவூர், திருநின்றியூரைப் பற்றிய குறிப்புக்களே அன்பர்களின் குழப்பம் தீர அருளித் திருத்தொண்டர்புராணச் சிந்தனேயை ஒட்டிக் குங்குலியக்கலயர் அருள் வரலாற்றை உபதேசிக்கிருர்கள்.

" குங்குலியக்கலயர் திருக்கடவூரில் அவதாரம் செய்தார் "– இப்படிச் சொல்லிவிட்டு மேலேவரலாறு சொல்லலாம்–குருமணி கள் தலச்சிறப்பினே அருளாமல் மேலே செல்லுவதை விரும்பு வதில்லே.

" திருக்கடவூர் – அட்டவீரட்டத்தலங்களுள் ஒன்று "

அட்ட வீரட்டத் தலம் என்ருல் என்ன? அவை யாவை?— என அறிய விழைவதும் அறிந்துகொள்ள வேண்டியதும் நம் கடமையல்லவா?

" வீரத்தானம் இறைவன் வீரத்தை விளங்கச் செய்த தலம். இவை எட்டு. இதனே அஷ்ட என்ற சொல் குறிக்கிறது தமிழில் அட்ட என்கிருேம்." இங்ஙனம் எளிமைப் படுத்தி விளக்கிய குருமணிகள் அவற்றை ஓர் இனிய பாடல் கொண்டு அறிவுறுத்தினர்கள்.

" பூமன் சிரம் கண்டி, அந்தகன் கோவல், புரம் அதிகை,
மாமன் பறியல், சலந்தரன் விற்குடி, மாவழுவூர்,
காமன் குறுக்கை, யமன் கடவூர், இந்தக் காசினியில்
தேமன்னு கொன்றையும் திங்களும் சூடிதன் சேவகமே "

இப்பாடல் வாயிலாக இறைவனது வீரச் செயல்களேயும்வகைப் படுத்தி விளக்கியருளினர்கள்.

திருக்கண்டியூரில் பிரமனது 5 தலைகளுள் ஒன்றைக்கொய்து நான்முகன் ஆக்கினன்; அந்தகாசுரனைத் திருக்கோவலூரில் அழித்தான்; திருவதிகையில் முப்புரம் எரித்தான்; தக்கன் சிரம் கொய்த வீரச்செயல் திருப்பறியலூரில் நிகழ்ந்தது. ஆதலால் அங்கே பூமிகரியாக உள்ளது. சலந்தராசுரனைத் திருவிற்குடியில் அழித்தான். வழுவூர் என்னும் தலத்தில் யானையை (மா) உரித்துப் போர்த்தான். திருக்குறுக்கையில் மன்மதனை (காமனை) எரித்தான். திருக்கடவூரில் யமனைச் சம்காரம் செய்தான்.

இவ்வீரச் செயல்கள் அனைத்தையும் சுருக்கமாக அருளிய குருமணிகள் – தருமையாதீன அருளாட்சியில் காலனை அழித்த திருக்கடவூர்ப் பெருமான் திருக்கோயிலும், காமனை எரித்த திருகுறுக்கைத் திருக்கோயிலும், தட்சன் சிரம்கொய்த திருப்பறியலூர்த் திருக்கோயிலும் ஆக மூன்று வீரட்டத் தலங்கள் வழிபாடுகள் தவருமல் சிறப்புற்று விளங்குவதைச்சுட்டிக்காட்டி அன்பர்களை மழ்கிவித்தார்கள்.

திருக்கடவூரில் அந்தணர் குலத்தில் கலயர் தோன்றினர் – இவ்வாறு அருளும் போது ஓர் ஆய்வையும் நமக்குப் புலப் படுத்துகின்றார்கள்.

திருக்கடவூர்ப் பெருமான் பெயரை வைத்துக் கொள்ளும் பெரும்பாலோர் அமிர்தகடேசன், அமிர்தலிங்கம் என்றே வைத்துக் கொள்வார்கள். 'கலயன்' — என்ற தமிழ்ப் பெயரை அந்தணர் குலத்தில் பிறந்தவர் வைத்துக் கொண்டமையைச் சிந்தித்துப் பார்க்கவேண்டும் – விளக்கம் அருளிய குருநாதர் எல்லா மொழிகளும் இறைவன் அருளிய மொழிகளே என்ற உணர்வு எல்லோருக்கும் வரவேண்டும் எனவும், மொழிக் காழ்ப்பு தோன்றக்கூடாதுஎனவும் புலப்படுத்தினர்கள். மேலும் நுட்பமாகச்சிந்திக்கிற போது சங்கரர் காலத்துக்கு முன் வாழ்ந்த அந்தணர்கள் சிவநெறி சேர்ந்தோரே என்று எண்ணத்தோன்றுகிறது – என்றாலும் இதனை ஆய்வாளர்கள் நன்கு ஆராய வேண்டும் – இவ்வாறு குருநாதர் தமது சமய ஆய்வுநோக்கைப் புலப்படுத்தினர்கள் – இத்தகைய சீரிய ஆய்வுகளை மேற் கொள்ளும் பொருட்டுச் சைவசித்தாந்த ஆய்வு நிறுவனத்தை நிறுவ அவர்கள் திருவுளம் பற்றி ஆவனசெய்தருளியுள்ளார்கள்.

திருக்கடவூர்ச் சிறப்புக்களை மொழிந்தருளி – கலயரின் சீரிய தொண்டு பற்றிக் குறித்தார்கள்.

"கலயர் தம் செல்வத்தை எல்லாம் இறைவனுக்கு குங்குலிய தூபம் இடுவதற்குச் செலவிட்டார்" – இப்படி ஒரு நெறியைக் கலயர் மேற்கொண்டமையால் குங்குலியக்கலயர் எனப் பட்டார்.

குங்குலியத் தூபம் இடுவது பற்றி விளக்கினார்கள் – தூபம் இடுவதால் என்ன பயன்? – பயனில்லாமல் ஒரு பணி செய்ய லாமா? – இது நம்மனத்தில் எழும் வினா.

"தூபம் இடுவது மனத்தை ஒருமைப்படுத்தப் பெரிதும் உதவும்" – மேலும் தூபமிடுவதால் வீட்டில் விஷக்கிருமிகள் அழியும் – ப்ளூ முதலிய விஷசுரங்கள் மனிதர்களைத் தாக்காது.

இப்படி இடப்படும் தூபம் ஐந்துவகை எனவகைப் படுத் தினார்கள். கற்பூரம், சாம்பிராணி, அகில், வெண்சந்தனம், குங் குலியம் என்பனஅவை. சிவதருமோத்தரம் என்றநூல்இவ்வாறு வகைப்படுத்தி மொழிவதாக அருளி, அந்நூலில் குங்குலியத் தைக் 'குக்குலு' எனக் குறிப்பதையும் சுட்டிக்காட்டினார்கள்.

குங்குலிய தூபமிடல் சிறிய செயலா, பெரிய செயலா? என ஆராயாமல் இடைவிடாமல் செய்த – 'வழுவாமல்' செய்த நாயனாரின்மாட்சிமையை–குறிக்கோளை நாம்சிந்திக்கவேணடும். செல்வம் நிரம்பியிருந்தகாலத்தில் மட்டும் செய்யாமல் வறுமை வந்தகாலத்தும் தூபமிட்ட லட்சிய வாழ்க்கையைக் குருநாதர், நாயனார் வரலாற்றின் மூலம் விளக்கியபோது நெஞ்சு நெகிழ்ந்தது.

விளம்பரம் இல்லாமல் – ஆடம்பரமில்லாமல் உயிர்க்கு உறுதி தரக்கூடிய தூபத்திருப்பணியை வழுவாதாற்றிய குங்குலியக்கலயர் தொண்டு நம்மை நெறிப்படுத்துகிறது.

குங்குலியக்கலயர், கடவூர்ப் பெருமான் கோயிலுக்குப் போவார்; தூபமிடுவார்; வழிபடுவார் – செல்வம் முழுவதையும் தூபமிட்டமையாலேயே இழந்த கலயர் மனம் தளரவில்லை; அடிமை முதலிய எல்லாவற்றையும் இழந்தும் லட்சியத்தை இழக்கவில்லை!

வீட்டில் மனைவியும் மக்களும் உணவின்றித் தவித்தனர்; அவருக்கும் அதே கதி! கலயனாரின் மனைவியார், கணவர் நிலைக்குப்பெரிதும் வருந்தினர்; நெல்வாங்கி அமுது ஆக்குவ தற்கு முதற்பொருளாகத் தம்திருமாங்கலியத்தைக்கழற்றி அளித் தார். கலயனார் அதனைப் பெற்றுக் கொண்டார். கடைவீதி

வழியே சென்ருர்; நெல்வாங்குவதற்காகச் சென்ற அவர், செய்த செயலோ ......... சிவபுண்ணியம்! எதிரிலே குங்குலியப் பொதியோடு (மூட்டை) ஒருவன் வந்தான்: " இஃது என்ன பொதி? " கலயர் கேட்டார். ' குங்குலியப்பொதி ' என்ருன் வந்தவன். " இறைவனுக்கேற்ற – நல்ல மணம் பொருந்திய குங்குலியப்பொதி இது " எனவே இதனைப் பெற்றுத் தூபம் இடுவேன் என நினைந்தார் – தான் எதற்காக வந்தோம் என்பதையே மறந்தார்.

குருமணிகள் இந்தப் பகுதியை – அதே கடவூரில் பிற்காலத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சியோடு அருமையாகஒப்பிட்டார்கள். மன்னன் இன்று என்ன திதி என்றுகேட்க – அமாவாசைநாளில் இன்று பௌர்ணமி என்று தன்னை மறந்துகூறி இறைவியருளில் திளைத்திருந்த பட்டர்நிலை! – இறைவனுக்குத் தூபமிடும் நினைவேயன்றிப் பிறவற்றை அறியாத கலயரின் உலகை மறந்த நிலை! இந்தஒப்பீடு அருளாளர்கள் இறையுணர்வு அன்றி, உலகமுகப்பட மாட்டார்கள் என்னும் உன்னதநிலையை நமக்கு அறிவுறுத்திறது!

கலயர் தாம் வைத்திருந்த தாலியைக் கொடுத்துக் குங்குலியப் பொதியைப் பெற்ருர்; திருக்கோயில் பொருள் வைக்கும் இடத்தில் கொண்டு சேமித்தார்; குங்குலியதூபம் இட்டவாறே– அங்கேயே தங்கி விட்டார்.

வீட்டில் மனைவியும் மக்களும் நெடுநேரம் காத்திருந்தனர்! பசியால் அயர்ந்தனர்; உறங்கினர். கலயரும் பசியால் உடல் தளர்ந்தார்; திருக்கோயிலிலேயே அயர்ந்துவிட்டார். இடையில் இறைவன் திருவிளையாடல்!

இறைவன் திருவருளால் குபேரன் தனது பெருஞ்செல்வங்களைப் பூமியில் கொணர்ந்து கலயனர் வீட்டில் சேர்த்தான். எங்கும் செல்வம்; நெல், பொன், பிறவளங்கள்! கலயனரின் மனைவியார் கனவில் பெருமான் தோன்றினர்; வீட்டில் செல்வம் நிறைந்திருப்பதை உணர்த்தினர். மனைவியாரும் திருவருளை நினைந்து வணங்கி உணவு சமைக்கச் செயற்பட்டார்.

திருக்கோயிலில் கலயனருக்கும் இது தெரிய வேண்டுமே! பெருமான் கலயருக்கு அசரீரிவாக்கால் இதனைத் தெரிவிக்கிருர். " நீ மிகவும் பசித்திருக்கிருய்; உனது மிகப் பெரிய வீட்டிற்குச் சென்று, பால் உணவும் இனிய உணவும் உண்க; துன்பம் நீங்குக " என்று அசரீரி வாக்கு எழுந்தது. கலயர் ' இறைவன்

திருவருளின் படியே ஒழுக வேண்டும்' என உறுதி பூண்டார்; இல்லம் சென்றார்; திருவருளை வியந்தார். கலையனார் இறை அருளால் பெற்ற செல்வத்தைக்கொண்டு தூபதீபத் திருத் தொண்டு செய்தார். அடியார்களைப்போற்றித் திருவமுது செய் வித்தார்; அடியார்க்கு வேண்டுவன கொடுத்தார்.

இந்நாளில் திருப்பனந்தாளில் ஒரு நிகழ்ச்சி நடந்தது! அங்கே தாடகை என்ற ஆதிசைவர் குலப்பெண்; சிவனைப் பூசிப்பவள்; மகவுவேண்டித் துதிப்பவள்; இடைவிடாது அன்பு கொண்டு ஆசாரத்துடன் வழிபட்டாள்; மாலைதொடுத்துஇறைவ னுக்குச் சாத்துவாள். ஒருநாள், மாலை தொடுத்தாள்; கோயிலில் பெருமான் முன்வந்தாள்; ஆடை நெகிழ்ந்தது! தனது முழங்கை களால் ஆடையை இடுப்போடு அணைத்துக் கொண்டாள்; கையிலோமாலை! கீழே வைப்பதற்கில்லை! அது ஆசாரக்குறைவு. பெருமானே தலைகுனிந்து ஏற்றார். சிவலிங்கம் சாய்ந்தது! மாலை யணிவித்தாள். ஆம்! ஒருபெண்ணின் அன்பிற்குச் சிவலிங்கம் சாய்ந்தது !

அரசன் சிவலிங்கம் சாய்ந்தமையை அறிந்தான். நிமிர்க்க எவ்வளவோ முயன்றான்; யானைகளையும் சேனைகளையும் கட்டி இழுத்தும் பயன் கிட்டவில்லை!

கலயர் இதனைக் கேள்வியுற்றார். உடனே திருப்பனந்தா ளுக்குப் புறப்பட்டார் – குருமணிகள் இந்த வரலாற்றுப் பகுதி யைத் தத்துவச் செறிவோடு விளக்கினார்கள்.

"தன்னால் நிமிர்க்க முடியும் என்று கருதிக் கலயனார் செல்லவில்லை. தானும் அங்குச்சென்று இளைக்கவேண்டும்; சிவ புண்ணியத்தால் நேரும் வருத்தத்தை தானும்அடையவேண்டும் என்றுதான் சென்றார். அதாவது நல்லகாரியத்திற்காகச் செயல் படுவோருடன் நாமும் பங்குகொள்ளவேண்டும்" இவ்வாறு குருநாதர் ஒரு வாழ்க்கை நெறியை நமக்கு உபதேசித்தார்கள்.

கலயர் சாய்ந்த லிங்கத்தைக் கண்டார்; பூங்கச்சோடு ஒரு கயிற்றில் தம்மையும் பெருமானையும் இணைத்தார்; வலியவருந்தி இழுத்தார். அன்புக் கயிற்றுக்கு அசையாமல் இருப்பாரா? நேரே நின்றார். குருமணிகள் சேக்கிழார் வாக்கினை எடுத்தருளு கின்றார்கள்.

"நண்ணிய ஒருமை அன்பின் நாருறு பாசத்தாலே
திண்ணிய தொண்டர் பூட்டி இளைத்தபின் திறம்பிநிற்க
ஒண்ணுமோ? கலயனார் தம் ஒருப்பாடு கண்டபோதே
அண்ணலார் நேரேநின்றார் அமரரும் விசும்பில் ஆர்த்தார்"

இப்பாடலின் விளக்கமாக – ஒரு பெண்ணின் அன்பிற்குச் சாய்ந்தபெருமான் ஒரு அடியாரின் அன்பிற்கு நிமிர்ந்தார் என அருளியமை அவர்கள் நுண்மாண் நுழைபுலத்தை எடுத்துக் காட்டுவதாய் அமைந்தது. இறைவனை அச்சம் காரணமாகவோ அன்பு காரணமாகவோ வழிபடவேண்டும். அன்புடனும் அச்சத்துடனும் வழிபடுவதே சான்றோர் நெறி. இதனையே 'பயபக்தி' என உலக நடையில் வடமொழியில் சொல்கிறோம் என அருளி, நாவுக்கரசர் "அஞ்சி யாகிலும் அன்புபட் டாகிலும் நெஞ்சம்வாழி நினை நின்றியூரை நீ" என அருளியுள்ளமையை மேற்கோள் காட்டினார்கள்.

மேலும் குருமணிகள் தாடகை வரலாற்றை ஆசாரம், அன்பு என்ற முறையில் வகுத்துக் கூறினார்கள் – தாடகை ஆசார நெறி. கலயர் அன்பு நெறி. – கண்ணப்பர் அன்பும் சிவகோசரியார் ஆசாரமும் போல, திருநீலநக்கர் ஆசாரமும் அவர் மனைவியார் அன்பும் போல இவ்வரலாறு அமைந்திருத்தலை ஒப்பிட்டமை சுவையாய் இருந்தது. இவை மூன்றிலும் இறைவன் அன்பிற்குத் தலைவணங்கியமையை எடுத்து இயம்பினார்கள்.

ஆடை நெகிழ்ந்த தாடகை இறைவனை ஏத்தி மானம் காத்துக் கொண்டமையைத் திரௌபதி துகில் உரியப்பட்ட போது இறைவனை ஏத்தி மானங் காத்துக் கொண்டமையோடு ஒப்பிட்டமை புதிய இனிய சிந்தனையாக அமைந்தது.

கலயர் திருப்பனந்தாளில் சிலகாலம் தங்கித் தொண்டு புரிந்தார்; திருக்கடவூர் மீண்டார். தூபமிடல் அடியார்களை அமுதுசெய்வித்தல் முதலிய தொண்டுகளை ஆற்றினார். இக்காலத்தில் ஞானசம்பந்தரும் நாவுக்கரசரும் ஆகிய இரண்டு ஆசாரியர்களும்சேர்ந்து திருப்புகலூர், திருவீழிமிழலை முதலிய தலங்களைத் தரிசித்துக்கொண்டு திருக்கடவூர் எழுந்தருளினர். குங்குலியக்கலயர் எதிர்சென்று வணங்கி அவர்களை இல்லத்திற்கு அழைத்துவந்து போற்றினார்; திருவமுது செய்வித்தார். கலயருக்குத் திருவருளும் ஆசாரியர் அருளும் கிடைத்தது.

குருமணிகள் கலயர் வரலாற்றை மூன்று வகையாகப் பிரித்துக் கொண்டு உபதேசித்தார்கள். கடவூரில் இறையருளால் தூபப் பணி செய்து செல்வம் பெற்றமை, அன்பின் செயலால் பனந்தாள் பெருமானை நிமிரச் செய்தமை, திருஞானசம்பந்தர் நாவுக்கரசருக்குத் திருவமுது செய்து பேறுபெற்றுச் சிறந்தமை – மூன்றையும் சமயதத்துவநெறி விளங்க உபதேசித்தார்கள். தொண்டை நாட்டுப் பஞ்சபூதத் தலங்கள் பற்றிய விளக்கம், தூபதீப மிடுதல் பயன் ஆகியவற்றையும் விளக்கி,

ஆற்றிய அருளுரை முழுமையானதாக இனிமையானதாக அமைந்தது.

குருமணிகள், வரலாற்றின் இடையே கடவூரில் தூபதீப அறக்கட்டளை திருவியமை பற்றிக் குறிப்பிட்டார்கள்.

‘ விரும்பிநல் விளக்குத்தூபம் விதியினால் இடவல்லார்க்குக்
கரும்பினில் கட்டிபோல்வார் கடவூர் வீரட்டனாரே’

என்ற அப்பர் வாக்கை விளக்கம் செய்தார்கள்.

“ கடமைகளை – தொண்டுகளை இடைவிடாமல் இலட்சிய நோக்கோடுசெய்தால் இறைவன் அருள்வான்” –குருமணிகளின் இந்த நிறைவான விளக்கம் உலகம் வளர வழிகாட்டும் நல்லுபதேசம்! இறையருளைக் குருவருள் வாயிலாகப்பெறுவோம்என்ற நிம்மதியோடு வீடு திரும்புகிறோம்.

வாழ்க குருமணிகள் !

---

கடிதம் :

ஆ. சிவகுருநாதன் காளுடுகாத்தான்
ஓய்வுபெற்றத் தபால்துறைத் தலைமை எழுத்தர். 7—12—83

* அடியேன் சென்ற இரண்டு ஆண்டுகாலமாகத் தருமை யாதீனத்திலிருந்து வெளிவரும் “ ஞானசம்பந்தம் ” இதழை மிகவும் ஆர்வத்துடன் மாதந்தோறும் எதிர்நோக்கி ஆன்மீக உணர்ச்சியுடன் வாசித்தும், சிந்தித்தும் தெளிந்தும் பெரும் பயன் பெற்று வருகிறேன். குருமகாசந்நிதானம் அவர்கள் வழங்கிவரும் அருளாசியில் மிகுந்த ஆழமான கருத்துக்களையும் மிகவும் எளிய முறையில் தக்க உதாரணங்கள்மூலம் அருள் உபதேசம் செய்துவருகிறபடியால் என்போன்றவர்களுக்குத் தெய்வீக உணர்ச்சியும் குருவருள் துணையால் திருவருள் கிருயையும் சிவஞானமும் சித்திபெறுவதற்கு அரிய வாய்ப்பு அளித்து வருகின்றது. மெய்யன்பர்கள் இம்மை மறுமை இன்பம் பெற்று உய்வதற்கு “ ஞானசம்பந்தம் ” பெரிதும் துணைபுரிகிறது. திருப்புள்ளிருக்குவேளூர்ப் பெருமானின் திருவருளால் மீண்டும் திருவாபரணங்கள் கிடைத்த செய்தியை “ ஞானசம்பந்தம் ” இதழில் படித்து அளவுகடந்த மகிழ்ச்சி அடைந்தேன்.

ஆ. சிவகுருநாதன்.

# ஆலய நிலங்களுக்குச் சட்டத்திலிருந்து விலக்கு:

## அரசியலால் இழுபறி?

சென்னை, நவ. 29 — குடிவாரதாரர்கள் சட்டத்திலிருந்து ஹிந்து ஆலய நிலங்களுக்கு விலக்கு அளிப்பது தொடர்பான மசோதாவை அரசியல் காரணங்களுக்காக நடந்து முடிந்த சட்டமன்ற கூட்டத் தொடரில் அறிமுகப்படுத்தவில்லை என்று ஒரு கருத்து நிலவுகிறது.

தமிழ்நாட்டில் நீண்ட காலமாய் நடைபெறுமல் உள்ள உள்ளாட்சித் தேர்தலை நடத்த அ.தி.மு.க. அரசு தயாராயிருப்பதாக அறிவித்துள்ளது. தமிழ்நாட்டில் ஹிந்து ஆலயங்களுக்குச் சொந்தமான நிலங்களுக்கு கிட்டத்திட்ட இரண்டு லட்சம் பேர் குடிவாரதாரர்களாக இருந்துவருகின்றனர். ஆலயநிலங்களுக்குக் குடிவாரதாரர் சட்டத்திலிருந்து விலக்களித்தால் இந்த 2 லட்சம் பேரும் பாதிக்கப்படுவர்.

தேர்தல் நெருங்கும் சமயத்தில் இம்மாதிரியான நடவடிக்கையால் இவர்களின் ஆதரவை இழக்க நேரிடுமே என்று அரசு அஞ்சுவதாகக் கருதப்படுகிறது. ஆலயங்களுக்கு நிலங்களில் இருந்து வரவேண்டிய வருமானம் பெருமளவில் நெடுங்காலமாகப்பாக்கிநிற்கிறது. ஆலயங்களின் அன்ருடபூஜைகள்கூடச் சிரமதசையில் நடைபெறுகின்றன. ஊழியர்களுக்கு ஊதியம் தரப் பணமுமில்லை. குடிவாரதாரர்களிலோ பெரும்பாலோர் நேரடியாக விவசாயம் செய்வதில்லை என்றும், ஆள் வைத்துச் செய்கின்றனர் என்றும் கூறப்படுகிறது.

இந்த விவரங்களைப் பல்வேறு சந்தர்ப்பங்களில் தெரிவித்த தமிழக ஹிந்து அறநிலையத்துறை மந்திரி இராம. வீரப்பன் ஆலய நிலங்களைக் குடிவாரதாரர் சட்டத்தின் கட்டுப்பாட்டில் இருந்து விலக்க மசோதா கொண்டுவரப்போவதாகவும், தமிழக முதல்வர் எம். ஜி. ஆரும் இதற்கு இசைவுதெரிவித்துவிட்டதாகவும் முன்னர் அறிவித்தார். ஆலய நிலங்களுக்குக் குடிவாரதாரர் சட்டத்திலிருந்து விலக்குத் தரப்படமாட்டாது என்று தமிழக வருவாய்த்துறை மந்திரி எஸ். டி. சோமசுந்தரம் தெரிவித்தார், இந்த உத்தேச மசோதா கடந்த சட்டமன்றத் தொடரில் தாக்கல் ஆகவில்லை.

நன்றி. — தினமணி.

30—11—83. பக்கம்-4.

தருமையாதீனம்

# ஸ்ரீ குருஞானசம்பந்தர் மிஷன்

## மயிலாடுதுறை கிளை

தருமையாதீனம் இருபத்தாருவது குருமகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் திருவுளப்பாங்கின் வண்ணம் தோற்றுவிக்கப்பெற்ற தருமையாதீனம் ஸ்ரீ குருஞானசம்பந்தர் மிஷன் 1—6—83 அன்று இந்திய டிரஸ்ட் சட்டத்தின்கீழ்ப் பதிவு செய்யப் பட்டுள்ளது. கல்விக்கூடங்கள், மருத்துவ மனைகள், வயது முதிர்ந்தோர் இல்லங்கள், ஊனமுற்றோர், சிறப்புப்பள்ளிகள் நடத்துதல், பொதுநலப் பணிகள், கோவில் மற்றும் வழிபாடுகள் காத்தல், கலை, பண்பாடு, சமயம் ஆகியவற்றின் வளர்ச்சி முதலிய சீரிய நோக்கங்களைச் செயற்படுத்தும் பொருட்டு, பணிகள் பலவற்றை மேற்கொண்டு ஆற்றிவருகின்றது. அவைகளுள் கல்விப்பணிகள் பற்றிய விவரம் இங்குத்தரப்பட்டுள்ளது.

## கல்விப் பணிகள்

1. ஸ்ரீ குருஞானசம்பந்தர் பாலர் பள்ளியில் 160 மாணவ மாணவியர் கல்வி பெறுகின்றனர்; 6 ஆசிரியர்கள் பணி புரிகின்றனர்,

2. ஸ்ரீ குருஞானசம்பந்தர் மெட்ரிக்குலேஷன் பள்ளியில் 200 மாணவ மாணவியர் படிக்கின்றனர். 1 முதல் 6 வகுப்புகள் உள்ளன. அரசாங்க அங்கீகாரம் பெற்றுள்ள இப்பள்ளியின் தொடக்கத்திற்கு மயிலாடுதுறை ரோட்டரி சங்கம் பேருதவி புரிந்துள்ளது. தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் அருளாணையின் வண்ணம் தருமையாதீனம் ஸ்ரீ குருஞான சம்பந்தர் மிஷன் ஆதரவில் இப்பள்ளி சிறப்பாக நடைபெற்று வருகின்றது.

3. ஸ்ரீ குருஞானசம்பந்தர் மிஷன் டிரஸ்டுக்காகத் தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் முதல் தவணையாக ரூ. 11,000 வைப்புநிதி வழங்கியுள்ளார்கள்.

4. ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் ஷ பள்ளி அங்கீகாரம் பெற வைப்புநிதிக்காக ரூ. 25,000 வழங்கியுள்ளார்கள். மேலும் பள்ளிக்குத்தேவையான நிதி முதலிய வசதிகள் செய்துதரத் திருவுளம்பற்றியுள்ளார்கள்.

5. மெட்ரிக்குலேஷன் பள்ளிக்கட்டிடம், விளையாட்டுத் திடல் முதலியவற்றுக்காகத் தரங்கம்பாடிச்சாலையில் 5 ஏக்கர் நிலம் ஒதுக்கீடு செய்துள்ளார்கள்; கட்டிடவேலை விரைவில் தொடங்க இருக்கிறது.

6. இப்பள்ளி, எதிர்காலத்தில் விடுதியில் தங்கிப் படிப் பதற்கேற்ற வசதியுடன் கூடிய பள்ளியாகச் செயற்பட வுள்ளது.

7. விடுதியில் தங்கிப்படிக்கும் மாணவர்க்குக் கல்வியுடன் ஒழுங்கு – கட்டுப்பாடும், இந்துசமய நெறிமுறைகளும் புகட்டி நல்வழிப்படுத்தத் திட்டமிடப்பட்டுள்ளது.

8. **காதுகேளாதோர் – வாய்பேசாதோர் பள்ளி:—** 2 ஆண்டுகட்குமுன் மயிலாடுதுறை ரோட்டரி சங்கத்தாரால் தொடங்கப்பட்டுத் தற்போது தருமையாதீனம் ஸ்ரீ குருஞான சம்பந்தர் மிஷன் ஆதரவில் – ஏற்று நடத்தப்படுகிறது.

9. இப்பள்ளியில், 20 மாணவ மாணவியர் பல்வேறு வகுப்புக்களில் கல்வி பயின்றுவருகின்றனர்.

10. இப்பள்ளியில் கல்விபயிலும்பிள்ளைகளுக்குப் பொதுக் கல்வியுடன் பேச்சுப் பயிற்சியும் உதட்டசைப்பின் மூலம் உரையாடலை அறியும் பயிற்சியும், ( Lip Reading ) அளிக்கப் படுகிறது.

11. மயிலாடுதுறை இன்னர்வீல் சங்கம் ரூ. 6, 300 விலை மதிப்புடைய தனிநபர்பேச்சுப்பயிற்சிக்கருவியை இப்பள்ளிக்கு நன்கொடையாக வழங்க முன்வந்துள்ளது.

12. இப்பள்ளி அரசாங்க அங்கீகாரம் பெற, தருமை ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் ரூ. 10,000 வைப்புநிதி வழங்கத் திருவுளம்பாலித்துள்ளார்கள்.

13. திருவாவடுதுறை ஆதீனம் குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சிவப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள் ஸ்ரீ மாயூர நாதர் தரிசனத்துக்கு எழுந்தருளியபோது பணிமன்றத்துக்குத்

திடீர்விஜயம்செய்து வகுப்புக்களையும் காதுகேளாதோர் வாய் பேசாதோர் பள்ளியையும் பார்வையிட்டார்கள்; இப்பள்ளிக்கு ரூ. 100 / = நன்கொடை வழங்கி மிஷன் பணிகளைப் பாராட்டிக் குழந்தைகளை ஆசீர்வதித்தார்கள்.

14. தற்போது, மூவர் விடுதியில்தங்கி, கல்வியும் பயிற்சியும் பெறுகின்றனர்.

15. இப்பள்ளிக்கு அரசாங்க அங்கீகாரம் கிடைத்தபின் இலவச விடுதி (தகுதியளவிலான கட்டணத்துடன்) இயங்கத் தொடங்கும்.

16. மனவளர்ச்சி குன்றிய குழந்தைகட்காகவும் ஒருபள்ளி தொடங்கப்பட உள்ளது.

---

**கடிதம் :**

M. ரெங்கசாமி திருச்சி 3
14, C. வாலாஜாரோடு, உறையூர். 28—11—1983

* திவ்விய இதழான "ஞானசம்பந்தம்" சந்தா செலுத்தி வாசித்துவருகின்றேன். அதனுள் தலையங்கம் போற்றற்குரியதாய் இருக்கின்றது. மற்றும் ஸ்தல வரலாறு, அடியார்கள் சரித்திர வரலாறு குருமகாசந்நிதானத்தின் அரிய சொற்பொழிவுகள் மற்றும் சிறப்புச் செய்திகளும் வெளிவருகின்றன.

சிறப்பாகஇன்றையநடப்பைஎழுதிச்சிந்திக்கவைக்கின்றது. இன்றைய உலகம் (மக்கள்) புலன் இச்சைக்கே மதிப்பளித்துச் சீரிய சைவநெறி முறைகளைப் புறக்கணித்து, உயிர் போன்ற ஒழுக்கம், ஒப்புரவு, அன்பு, அடக்கம், அறம், அருள், வாய்மை போன்ற பண்பாடுகளை மறந்துவருகிறது. இதனை அரசாங்கமும், பொதுமன்றங்களும், தர்ம ஸ்தாபனங்களும், கண்காணித்து வளர்க்கவும், போற்றவும் வேண்டும்.

திருக்குறள், திருவாசகம், திருமந்திரம் போன்ற செந்நெறி வேதங்கள் அரசியல் அமைப்பை அழகுடன்தருகின்றன. அதன்படி ஆட்சியாளர்கள் செயல்படவேண்டும். செயல்பட்டால் நாடு செழிக்கும். சமதர்மம் ஓங்கும். பக்தி வளரும். பண்பாடு உயரும். ஆலயம் சக்திஓங்கும். வேதம் வாழ்வுதரும். அரசாட்சி அருளாட்சியாகப்போற்றப்படும். அக்காலமேதமிழ்த்தாய்க்குப் பொற்காலமாகும். ஆம்! சிதம்பரம் பொதுநடத்தரசர் அருள் புரிவாராக.

சிதம்பரம் அரங்கசாமி.

மலைத்துவிடாதீர்கள் !

# நெல் குத்தகை பாக்கி 8,49,129 குவிண்டால்

தஞ்சாவூர் நவ. 27–தஞ்சை மாவட்டத்தில் இந்து அறநிலையத் துணை ஆணையர் பொறுப்பில் 394 ஆலயங்களும், உதவி ஆணையர்கள் பொறுப்பில் 4023 ஆலயங்களும், ஆகக்கூடுதல் 4417 ஆலயங்கள் இருக்கின்றன. இந்த அறநிறுவனங்களுக்குச் சொந்தமாக நஞ்சை நிலம் 79, 914—44 ஏக்கரும், புஞ்சை நிலம் 47,914—23 ஏக்கரும் மானாவரி நிலம் 11, 582—57 ஏக்கரும் ஆக கூடுதல் 1,39,444—24 ஏக்கர் நிலம் இருக்கிறது. இவைகளிலிருந்து வரவேண்டிய நெல் குத்தகை பாக்கி எவ்வளவு தெரியுமா ? மலைத்து விடாதீர்கள். எட்டு லட்சத்து நாற்பத்து எட்டாயிரத்து, 129 குவிண்டால் நெல்குத்தகை பாக்கியாக இருக்கிறது. இதன் கிரயம் ரூ. 11,87,38,014—00 ஆகும். இது தவிரப்பணமாக வரவேண்டிய பாக்கி ரூ 76,03,176—27 இருக்கிறது. இரண்டையும் சேர்த்தால் மொத்த பாக்கி ரூ. 12 கோடியே 63 லட்சத்து 41 ஆயிரத்து 190 வசூல் பாக்கி இருக்கிறது. விளைவில் 25 சதவீதம் கொடுத்தால்போதும் என்பது சட்டம். இதை வசூலிக்கச்சட்டத்தில் விதிவிலக்கு அளிக்க, அறநிலையத்துறை அமைச்சர் விரும்புகின்றார்.

இந்த நியாயமான கோரிக்கைக்கு எதிர்ப்பு தெரிவிக்கப் படுகிறது. இந்த நியாயமான பாக்கியை வசூலிக்க எதிர்ப்புத் தெரிவிப்பவர்கள் ஆலய ஊழியர்களுக்கு எப்படிச் சம்பளம் கொடுப்பது, என்று சொல்ல மறுக்கின்றார்கள். குத்தகை பாக்கியைத் தரவேண்டியவர்கள் யார்? நிலத்தில் நெற்றி வேர்வைபட உழுபவர்களா ? இல்லை என்கிறார், அமைச்சர் இராம. வீரப்பன். இடைத்தரகர்களே குத்தகைதாரர்களாக இருக்கின்றார்கள். இதற்கு ஒரு முடிவு ஏற்படவேண்டும் என்றே பக்தர்கள் எண்ணுகின்றார்கள்.

நன்றி. —தினமலர் 28—11—83.



( 16 ஆம் பக்கத் தொடர்ச்சி )

ஹரித்துவாரில் பல ஆசிரமங்கள் உள்ளன. எல்லா ஆஸ்ரமங்களும் அழகிய வேலைப்பாடுடன் கூடியன. மற்ற ஆஸ்ரமங்களைக்காட்டிலும் 'பவான்தம்' மிகவும் கவரக்கூடியதாய் உள்ளது.

ஆலயங்களிலும் (மந்திர்கள்) ஆஸ்ரமங்களிலும் தெய்வத் திருவுருவங்களையும் மகான்களின் உருவங்களையும் சலவைக் கற்களில் அமைத்துள்ளனர். மேலும் அவற்றைக் கண்ணாடி அறைகளில் வைத்துள்ளனர். நிலைக்கண்ணாடி அறைகளில் உள்ளே நூற்றுக்கணக்கான பிம்பங்களைக் கண்டு, பிரமிக்கும் நிலை ஏற்படுகிறது. அற்புதமான கோலம்!

இராமாயண பாரதக்காட்சிகள்; கீதைக் காட்சிகள்; உபநிஷத வாக்கியங்கள், இராமகிருஷ்ணர் முதலிய மகான்களின் பொன்மொழிகள் - இவைகளை அங்கே மந்திர்களிலுள்ள சலவைக் கற்கள் ஏந்திநிற்கின்றன.

ஹரித்துவாரில் ஒருநாள்; இருவேளையும் புனித கங்கை நீராட்டு; காணக்கிடைக்காத இனியகாட்சிகளுடன்-நிறைந்தது. கங்கோத்திரியை நோக்கிப் புறப்பட்டோம்.

## 3. உத்தரகாசிப் பயணம்.

20 ஆம்தேதி காலை நான்கு மணிக்கு எல்லோரும் எழுந்து விட்டோம். அத்திப்புலியூர் முதலியார் குடும்பத்தினர் உணவு தயார் செய்தார்கள்; 'உண்டோம்' என்று சொல்வதைக் காட்டிலும் 'உண்டு மகிழ்ந்தோம்' என்று சொல்வதுதான் சரி.

யாத்திரையில் கலந்து கொண்ட 33 அன்பர்களில் எழுவர் கங்கோத்திரிக்கு வரவில்லை. வயது, உடல்நிலையே இதற்குக் காரணம். அவர்கள் எழுவரும் பத்ரிநாத், ரிஷிகேசம் சென்று ஹரித்துவார் மீண்டு வாரணாசி திரும்புவதாய் ஏற்பாடு. இதற்குத் துணையாக இராஜகோபால் என்பவரைக் காசிவாசி சுவாமிகள் ஏற்பாடு செய்தார்கள்.

நாங்கள் காலை 7 மணிக்குச் சுற்றுலாத் துறையைச் சேர்ந்த தனிப்பேருந்தில் கங்கோத்ரி செல்வதாய்த் திட்டம். பேருந்து வந்தது - ஆனால், அது சுற்றுலாத்துறைப் பேருந்து அன்று - தனியார்துறைப் பேருந்து! எல்லாரும் ஏறி உட்கார்ந்த பிறகு கயிலைமாமுனிவர் கடைசியாக ஏறி அமர்ந்தார்கள்.

அப்போது வருத்தம் தரும் செய்தியொன்று எட்டியது. கயிலை மாமுனிவரின் பச்சைக்கல் மோதிரத்தைக் காணோம்! கேள்விப் பட்டதுமுதல் எல்லோருடைய மனத்திலும் சஞ்சலம். வருத்தம்..

காசிவாசி சுவாமிகள் திருப்பனந்தாளை விட்டுப் புறப்பட்டு சென்னைக்கு வந்த போது – முதலுதவிக்கு என வாங்கிவைத் திருந்த ரூ250மதிப்புள்ள மருந்துப்பெட்டி சென்னைக்குவரவில்லை. ஹரித்துவாரிலிருந்து செல்வதற்காக – நான்கு மாதங்களுக்கு முன்னமே ஏற்பாடுசெய்திருந்த சுற்றுலாத்துறை பஸ்வரவில்லை. காசிவாசி சுவாமிகள் மோதிரம் காணமல் போனது – இப்படித் திடுக்கிட வைக்கும்சம்பவங்கள் பயணத்திற்குத் தடைக்கற்கள் போல அமைந்தன. ‘ குருவருள் வெல்லும் ’ என்ற நம்பிக்கை யோடு ‘வேயுறுதோளி’,‘தொண்டரஞ்சுகளிறு’ முதலியதேவாரப் பதிகங்களை ஓதியவாறே பயணம் மேற்கொண்டோம்.

திட்டப்படிக் காலை 8 மணிக்கு டேராதூனை அடைந்து உடனே அங்கிருந்து புறப்படவேண்டும். ஆனால்...! டேரா தூனில் பஸ் நிறுத்தப்பட்டது. ஒரு மெக்கானிக் வந்தார்; எஞ்ஜின் ஆயிலை மாற்றிச் சுத்தம் செய்ய ஆரம்பித்தார்; டயர் களுள் இரண்டை மாற்ற வேண்டும் என்று கூறி அவற்றையும் மாற்றினார்கள். மலைப்பகுதியில் பயணம் தொடங்கும் போது இந்தவேலைகள் என்றவுடன், மலைப்பாதையில் என்ன ஆகுமோ என்ற பயம்வேறு எங்களைக் கவ்விக்கொண்டது. இது நான் காவதுதடங்கலோ என்றுகூட எண்ணத்தோன்றியது. சுற்றுலாத் துறையினர் தங்கள் பேருந்து எதிர்பார்த்தபடி வராததால் இந்தப் பேருந்தை ஏற்பாடு செய்ததாகவும், பஸ் சரியான நிலையில் இருப்பதற்காகவே இந்த வேலை நடக்கின்றன என்றும் கூறினர். மனம் நிம்மதி அடைந்தது. காலை 11-30 க்கு பஸ் புறப்பட்டது.

முசௌரி வழியாக, பகல் 1–30 மணிக்கு கெம்டிநீர்வீழ்ச்சிப் பகுதியை அடைந்தோம். தடங்கலோடுவந்த பயணமல்லவா? களைப்பு அதிகமாகவே இருந்தது. சற்று உலாவினோம்; ஹரித் துவாரிலிருந்து தயார் செய்து வந்த உணவுகளை உண்டோம். கயிலைமாமுனிவர் பரிவோடு எல்லாருக்கும் உணவு பரிமாறச் செய்தார்கள்; ஆப்பிள் வாழைப்பழம் முதலியவைகளையும் எங்களுக்கு அன்போடு கொடுத்தார்கள்; எங்கள் கண்கள் இயற்கையழகை உண்டன; அந்நேரத்தில்வயிற்றுக்கும் நல்ல உணவு காசிவாசிசுவாமிகள் வெளியிடங்களில் தம் பணிகளைத் தாமேசெய்துகொள்கின்றார்கள். நாம் இத்தகைய முனிவர்களிட மிருந்து கற்கவேண்டிய பாடங்கள் – யாத்திரைகளின் போது – பல; பல.

முசௌரியிலிருந்து 57 கி. மீ தூரத்தில் உள்ளது சாபா என்றஊர். சுமார் 5000 அடி உயரம், நல்ல காலநிலை. பண்டார்பூஞ் மலைச்சிகரத்தையும் பனிமுடியசில சிகரங்களையும் அங்கிருந்து காண்பது ஒருதனி அனுபவம். இப்பகுதியிலிருந்து 21 கி. மீ. தூரத்தில் தெசிரி என்ற ஊர். 2,900 அடி. மலைமேல் உயரத்தில் போய்க்கொண்டிருந்த நாங்கள் இப்பகுதிக்கு வரும் போது சுமார் 2000 அடி இறங்கி வந்தோம். இது பழைய தெசிரி கார்வால் சமஸ்தானத்தலைநகரம். மகாராஜா சுதர்ஷா என்பவரால் அமைக்கப்பட்ட பழைய அரண்மனைகள் இங்கே உள்ளன.

இங்கு தேவப்ராயாக், உத்ரகாசி, ஸ்ரீநகர், திவ்வாராசெல்லும் நான்கு முக்கியமான சாலைகள் சந்திக்கின்றன. இங்கிருந்து மறுபடி மேல்நோக்கிச் சென்றோம். சுமார்3900 அடிஉயரத்திலுள்ள தரசு என்ற இடத்தை அடைந்தோம். உத்தரகாசி வழியாகக் கங்கோத்திரி செல்லும் சாலையும், பர்கோட் வழியாக யமுனோத்ரி செல்லும் சாலையும் இங்கே பிரிகின்றன. உத்தரகாசியை நோக்கிப் பஸ் சென்றது.

உத்தரகாசிக்குச் செல்லும் சாலை, பாகீரதி நதிக்கரையில் உள்ளது; கரையில் செல்கிறது. இயற்கையழகு கொஞ்சும் வளமான பகுதி அது. ஒரே பசுமை; கோதுமை, நெல், கேழ்வரகு, சோளம் முதலியனசெழித்து வளர்ந்திருக்கும்காட்சி மனத்தைக் கொள்ளைகொள்கிறது. 'மனிதர்களெல்லாம் குளிருக்குப் போர்த்திக்கொள்கிறார்களே; நாமும் கம்பளம்போர்த்திக்கொள்வோம்' என்று எண்ணியதோ என்னவோ! பச்சைக்கம்பளம்போர்த்திக் கொண்ட அழகிய மலைப்பகுதியை அங்குக் காணமுடிந்தது! பயிர்கள் செழிக்கும் அந்தமலைச் சாரலில் வரப்புக்கள் கட்டம் கட்டமாக ஓவியம் வரைந்தது போல் காணப்பட்டன.

உத்தரகாசி வந்தடைந்தோம். உத்தரகாசி மாவட்டத்தின் தலைநகரம் அது. பிரசித்தி பெற்ற ஆலயங்கள், ஆஸ்ரமங்கள், தர்மசாலைகள் அங்கே உள்ளன; விஸ்வநாதர் கோயில் புகழ் பெற்றது. இங்கு மகரசங்கராந்தி சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது இங்கிருந்து 2. கி. மீ. துரத்தில் உசாலி என்ற காலனி இருக்கிறது. அங்கு மிகவும் பாண்டித்தியம் பெற்ற சாதுக்கள் (சந்நியாசிகள்) இருக்கிறார்கள்.

நாங்கள் எங்கள் திட்டப்படி உத்தரகாசியில் தங்குவதாய் இல்லை; ஆனால் பல தடங்கல்களால் காலதாமதம் ஏற்பட்டு உத்தரகாசியில் இரவு தங்க நேர்ந்தது; தங்குவதற்குச் சரியான இடம்கிடைக்கவில்லை; போலாநாத் சந்நியாசியின் ஆசிரமத்தை மிகவும் சிரமப்பட்டு அடைந்தோம். அவர் காசிவாசிசுவாமிகளை

யும் எங்களையும் நன்கு வரவேற்றார். கங்கைக் கரை ஓரத்தில் புதிதாகக் கட்டப்பட்டுள்ள மூன்று அறைகள் கொண்ட ஓர் இடத்தைக் கொடுத்தார். இருபது அடிதூரத்தில் கங்கை 'ஓம் ஓம்' ஒலி எழுப்பிச் செல்வதை அங்கிருந்தே உணரமுடிந்தது.

பயணம் செய்த களைப்பு; நித்திரை செய்ய வேண்டும் என்ற நினைப்பு எங்களை அணைத்தது. ஆனால் சுவாமிகளின் 'பச்சைக்கல்மோதிரம்' பற்றிய நினைவுகள் எங்களைவாட்டிற்று. எங்கே விழுந்திருக்குமோ? எப்படித் தொலைந்ததோ! என்ற எண்ணம் எங்களுக்கும் நிம்மதிக்கும் இடையே இரும்புத் திரையைப் போட்டிருந்தது. நல்லசெய்தி கிடைக்கவேண்டுமே என ஆதங்கப்பட்டுக்கொண்டிருந்தோம். (தொடரும்)

---

## மதம் மாறுவதால் சமூக முன்னேற்றம் கெடும்.

நெல்லை, நவம்பர் 16 – மதம் மாறுவது தாழ்த்தப்பட்ட சமூகத்தினரைப் பலவீனப்படுத்துவதோடு முன்னேற்றத்தையும் தடுக்கிறது என்று முன்னாள் எம். பி. யான ஆர். என். ஆறுமுகம் கூறினார். புளியங்குடியை அடுத்த சிதம்பரப்பேரியில் திருமணம் ஒன்று அவர் தலைமையில் நடந்தது. அப்போது மணமக்களை வாழ்த்திப் பேசுகையில் குறிப்பிட்டதாவது ;-

மணமகன் அரசு வங்கியில் வேலைசெய்யும் ஒரு பட்டதாரி. மணமகளும் படித்தவர். தாழ்த்தப்பட்ட சமூகத்தினர். கல்வித் துறையில் இப்போது ஓரளவு முன்னேறிவருகின்றனர். இந்த திருமணம் இந்து திருமண முறையையும் ஏற்றுச் சமுதாய முறையையும் ஏற்றுச் சுருக்கமாகநடந்தது. இதுகுறித்து நான்மகிழ்ச்சி அடைகிறேன். தீண்டாமை உச்சநிலையில் இருந்தபோதிலும் நாம் இந்துக்களாகவே வாழ்ந்தோம். நாட்டுச் சுதந்திரத்துக்குப் பின் அரசு நடவடிக்கைகளால் முன்னேறிவருகிறோம். தீண்டாமையும் படிப்படியாக அகன்றுவருகிறது. மதத் தலைவர்கள் நம்மிடம் அன்பும் ஆதரவும் காட்டத் தொடங்கியிருக்கிறார்கள். இவ்விதம் நல்ல மாற்றங்கள் படிப்படியாக ஏற்பட்டுவரும் போது நம்மில் சிலருக்குச் சபலம் தோன்றி மதம் மாறுகின்றனர். அரசாங்கச்சலுகைகள்மூலம் பட்டம்பெற்றுப் பதவியிலுள்ள ஒரு சிலர் நம் முன்னேற்றத்தை எண்ணிப்பாராது மதம் மாறுவதில் முன்னணியில்நிற்கிறார்கள். இது தாழ்த்தப்பட்ட சமூகத்தினரைப் பலவீனப்படுத்துவதோடு அவர்கள் முன்னேற்றத்தையும் தடுக்கும். குழப்பங்கள் ஏற்படவும் ஏதுவாகும். இது தேச நலனுக்கு நல்லதல்ல. மதம் மாற்றம் தேவையில்லை. மன உறுதியோடு இருப்போம், முன்னேறுவோம்.

நன்றி. —*தினமலர். 18—11—83.*

# கயிலைக் குருமணியின் தமிழ்ப்பணி

பேராசிரியர் திரு. இரா. செல்வக்கணபதி எம்.ஏ.,பி.எட்.

ஞானத்தை ; நற்றமிழின் நலங்கண்ட நல்லறிவை ;
மோனத்தை ; முழுத்துறவின் வடித்தெடுத்த இலக்கணத்தை ;
கானத்தை ; இசைத்தமிழின் கனிந்த சாற்றை ;
வானத்தை எட்டுகின்ற புகழின் ஊற்றை ;
கயிலைக் குருமணியின் கான்முளையை ;
பயின்றறிய இயலாத பண்பாட்டு இமயத்தை ;
நெஞ்ச மலர்எடுத்து நினைவில் அமுதூற்றி;
அஞ்சலித்தேன் ! கவிதை ஆறுவர என்னகுறை ?

பாடும் கவிஞர்களே ! பண்பார்ந்த அன்பர்களே !
கூடிக் கவிமாந்தும் குணமிக்க நண்பர்களே !
கயிலைக் குருமணியை ! காணரிய ஆதவனை !
கவிதைநான் பாடுகிறேன் ; கண்டு நகைக்காதீர் !

விண்ணைச் சுருட்டியொரு வேர்க்கடலைத் தோலுக்குள்
கண்ணிமைக்கும் நேரத்தில் கரந்திடுதல் ஒல்லுவதோ ?

புல்லெடுத்துச் சிங்கத்தின் பொல்லாத பாய்ச்சலினை
வெல்லுவது கூடுமென விரித்துரைப்பார் மூடரன்றோ ;
நல்லுணர்வே இல்லாதான் ஞானத்தின் மேல்நிலையில்
வெல்லும் நெறிவகுத்து வென்றிடுதல் கூடுவதோ ?

கயிலைக் குருமணியின் கன்னித் தமிழ்ப்பணியை
கவிதைச் சிறைப்பிடித்தல் கனவாய் முடியாதோ ?

எந்தப் பணியைநான் எழுத்தாக்க முனைந்தாலும்
அந்தமிலான் தமிழ்ப்பணியை அளவிடுதல் கூடுவதோ ?

கல்லூரி கண்டுதமிழ் கற்று முனிவரெலாம்
எல்லையிலாப் புகழீட்ட எண்ணித் தருமையிலே

பல்கலைக் கல்லூரி பாங்காய் நிறுவிஎமை
படிப்பித்து வாழ்வித்த பண்பை நினைப்பேனா ?

கற்றவர்கள் எங்கெங்கே ; கண்டு அவரைஎலாம்
முற்றத்தில் கொண்டுவந்து ; முந்து தமிழ்ப்பணியை
ஆற்று எனஊக்கி அவரை உலகத்தார்
போற்றவைத்த பேரன்பைப் புகழ்ந்து மகிழ்வேனா ?

சொக்கன் திருநாளில் சோர்வின்றி நல்லோரை
வித்தகர் தமிழ்கற்ற விற்பனரை அழைப்பித்துப்
பட்டம் பலதந்து பாரறிய அன்னோரைப்
பாராட்டிச் சிறப்பித்த பண்பாட்டை நினைவேனு ?

தேவாரத் திருமுறையைத் தித்திக்கும் தீங்கரும்பை
தெய்வ மணங்கமழ தெளிவான உரைகண்டு
தில்லையிலே யானைமேல் தெருவெல்லாம் கொண்டுவர
எல்லையிலாய் நினைந்திட்ட எண்ணத்தை மறப்பேனு ?

பட்டைப் பலதீட்டிப் பளபளக்க வைரத்தை
எட்டுத் திசையெல்லாம் எழிலாக்கி விட்டதைப்போல்
உரைவளத்தால் குறட்பாவை உலகத்தார் மனம்மகிழ
உருவாக்கி வழங்கிட்ட உள்ளத்தை நினைப்பேனு ?

தேவாரத் தமிழ்கற்ற திருவுடையார் தமைக்கண்டு
திருவாமூர் சீகாழித் திருத்தலத்தில் கொண்டுவந்து
பொன்னுடை போர்த்திப் பொற்பதக்கம் வழங்கிட்ட
எண்ண விரிவுகண்டு இறுமாந்து நிற்பேனே ?

நூல்கள் பலநூறு நொய்வின்றி அச்சேற்றிச்
சால்புடையார் போற்றச் சரியான காலத்தில்
திட்டமிட்டுச் செய்த தீந்தமிழின் நல்வாழ்வைக்
கிட்டநின்று கண்ட கிறுக்கில் உளரேனே ?

தமிழில் அமுதனைய தள்ளரிய நீதிகளை
அமுதமெனவழங்கி அவற்றைஎலாம் ஒன்ருக்கி
செந்தமிழ்ப் பூம்பொழிலாய் சிந்தை நிறைவித்த
விந்தைப் பணிநினைந்து விழுந்து வணங்கேனே ?

இன்னாள் நன்னாள் ; அதிலும் ஓர் பொன்னாள்
எனத்தொடங்கிச் சிலசொல்லி இதயத்தை நிறைவித்து
சிந்தையெலாம் தமிழாகச் சிவனடிகள் மறவாது
அந்தமிலாய் மறைந்தனையே அதைநினைந்து அழுவேனே

வானத்தார் தேவரெலாம் வடமொழியே பேசுவதாய்
வாய்ப்பந்தல் போட்டாரை வாயடைக்கச் செய்தனையே
வண்ணத் தமிழ்அங்கே வழங்கவில்லை என்றறிந்தால்
வானத்தை விட்டிங்கே வந்திருக்க மாட்டாயோ ?

தமிழைப் பிரித்தறியா சைவத்தின் நாயகனே !
தண்டமிழின் சுவைமாந்தி தமிழின் நிலைகண்டு
தமிழானாய்; அமுதானாய் ; தமிழ்ச்சொக்கன் அடிநீழல்
தருமமென நின்ருய் ; தாள்வணங்கி வாழுகின்றேன் ;

---

# அனைத்துலக

# முதல் சைவசித்தாந்தக் கருத்தரங்கம்

## அறிக்கை எண் : 2

தருமபுரம் ஆதீனமும், திருச்சிராப்பள்ளி பாரதிதாசன் பல்கலைக்கழகமும் இணைந்து, வரும் 1984 பிப்ரவரி 3, 4, 5 வெள்ளி சனி, ஞாயிறு ஆகிய மூன்று நாட்களும், தருமையாதீனத்தில் அனைத்துலக முதல் சைவ சித்தாந்தக் கருத்தரங்கம் ஒன்றை மிகச்சிறப்பாக நடத்த ஏற்பாடுகள் செய்து வருகின்றன. இது பற்றிய முதல்தகவல் அறிக்கை சென்ற ஞானசம்பந்தம் இதழில் வெளியிடப்பெற்றிருந்தது. செய்தி ஏடுகளிலும் இதுபற்றி விரி வான செய்திகள் வெளிவந்தன.

தமிழகத்திலும், கடல்கடந்த கீழை, மேலை நாடுகளிலும் வாழும் நூற்றுக்கணக்கான அன்பர்கள் இக்கருத்தரங்கினை வர வேற்று, மகிழ்ச்சி தெரிவித்து, இது சிறப்பாக நடைபெறுவதற்கு உரிய ஆக்கப்பூர்வமான யோசனைகளையும் கூறி, உரிய ஒத்துழைப்பு நல்குவதாகவும் எழுதியுள்ளார்கள். இந்தியாவின் பல்வேறுமாநிலங்களில் வாழும் சைவ சித்தாந்த அறிஞர்களும், அமெரிக்க ஐக்கிய நாடுகள், கனடா, பிரான்ஸ், இங்கிலாந்து, தென் ஆப்பிரிக்கா, மலேஷியா, இலங்கை போன்ற நாடுகளில் வாழும் சைவசித்தாந்த ஆய்வாளர்களும் இக்கருத்தரங்கில் பங்கேற்க இசைந்துள்ளனர்.

ஏறத்தாழ ஐம்பதின்மர், கருத்தரங்கத்திற்கான கட்டணங் களையும், கட்டுரைச் சுருக்கங்களையும் இணைத்து, இக்கருத்தரங் கில் பங்கேற்க விண்ணப்பித்துள்ளனர். அறிஞர்களிடையே காணப்படும் ஆர்வம் பெரிதும் நம்பிக்கையூட்டுவதாக அமைந் துள்ளது. தத்துவத்துறை, மொழித்துறையைச்சாராத அறிவியல் துறை சார்ந்த அறிஞர்களும், இதில் பங்கேற்கப் பெரிதும் விருப் பங்காட்டி எழுதியுள்ளனர். வந்து சேரும் தக்க கட்டுரைகளில் ஏறத்தா முப்பது கட்டுரைகள் தேர்ந்தெடுக்கப்பெற்றுக் கருத்துக்கள் அடிப்படையில் பகுக்கப்பெறும். தலைவர் ஒருவரும் கட்டுரையாளர் மூவருமாகப் பத்துக் கருத்தரங்கங்கள் இடம்

பெற ஏற்பாடாகி வருகிறது. சைவசித்தாந்தத்தில் பெரிதும் பயிற்சியுடைய அறிஞர்கள் கருத்தரங்கத் தலைமை ஏற்க அழைக்கப்பட்டுள்ளனர். தேவை ஏற்படின் ஒன்றிரண்டு கருத்தரங்கங்களைக் கூட்டிக் கொள்ளவும் ஏற்பாடாகியுள்ளது.

கட்டுரையாளர்கள் வேண்டிய அளவு விண்ணப்பித்திருப்பதால், புதிதாக இனி அன்பர்கள் இக்கருத்தரங்கில் பங்கேற்க வாய்ப்பில்லை. பார்வையாளர்களாக மூன்றுநாளும் தங்கியிருந்து கருத்தரங்க நடைமுறைகளில் பங்கேற்க இனியும் விண்ணப்பிக்கலாம். பார்வையாளர் கட்டணம் ருபாய் 30-00 செலுத்தி 15—1—1984 க்குள் விரும்புவோர் பதிவு செய்து கொள்ளலாம். தேர்ந்தெடுக்கப்பெற்றக்கட்டுரையாளர்களுக்குத்தனித்தனியே அறிவிக்கப்பட்டுள்ளது. கட்டுரை எழுத விரும்பிப் பதிவு செய்து கொண்டுள்ள ஏனையோரைப் பார்வையாளராகப் பங்கேற்க அழைக்கப்பட்டிருக்கிறது.

மற்றபடி, முதல் அறிக்கையில் கண்டவாறு ஏனைய அங்கங்களுடன் கருத்தரங்கம் சிறப்பாக நடைபெற ஏற்பாடாகியுள்ளது. அண்மையில் தருமையில் இக்கருத்தரங்கினைச் சிறப்பாக நடத்துவது குறித்து ஆலோசனைக் கூட்டம் ஒன்று நடைபெற்றது. தருமை ஸ்ரீலஸ்ரீகுருமகாசந்நிதானம் அவர்கள்முன்னிலையில் தவத்திரு. குன்றக்குடி, மகாசந்நிதானம் அவர்களும், திருப்பனந்தாள் ஸ்ரீகாசி மடத்ததிபர் காசிவாசி சுவாமிகளும், மற்றும்சைவசித்தாந்த அறிஞர்களும்பங்கேற்றனர். கருத்தரங்க நடைமுறை, தலைப்புக்கள், கட்டுரையாளர்கள் ஆகியன பற்றிய முடிவுகள்காணப்பெற்றன. மயிலாடுதுறைநகரப்பிரமுகர்களும், மற்றும்சைவ அன்பர்களும் தருமையில் கூடி, இங்கருத்தரங்கத்திற்கு உரிய ஒத்துழைப்பு நல்குவதாக உற்சாகத்துடன் உறுதியளித்துள்ளனர்.

சமயப்பற்றுள்ள பக்தர்களும், சைவப் பேரன்பர்கள் அனைவரும் இக்கருத்தரங்கம் சிறப்பாக நடைபெற்று நற்பயன் விளைக்க, எல்லாவகையிலும்ஒத்துழைக்கும்படி ஞானசம்பந்தம் கேட்டுக்கொள்கிறது. அனைத்துலக முதல் சைவ சித்தாந்தக் கருத்தரங்கம்முதன்மைபெற்று நடைபெற அனைத்துவகையிலும் சிறக்க அன்பர்கள் ஆக்கம் தருவார்களாக.

---

சிவமயம்

# மார்கழிமாதச் சிறப்பு நாட்கள்

16—12—83 வெள்ளி, தனுர்பூசாரம்பம். தனுர்ரவி 17-41. சடசீதி புண்ணியகாலம். திருவையாறு மாதப்பிறப்பு தீர்த்தம். குருபெயர்ச்சி. சனிக்கிழமை அதிகாலையில் மணி 5-51 ஸ்ரீரங்கத்தில் வைகுண்ட ஏகாதசி.

17—12—83 சனி, மகாப்பிரதோஷம். தருமையில் ஸ்ரீ சண்முகருக்கு கிருத்திகை அபிடேகம். விரதம.

18—12—83 ஞாயிறு, வேளூர்க் கிருத்திகை,

19—12—83 திங்கள், பௌர்ணமி விரத பூசை, மாதபூசையில் நெய் அபிடே கம்.

20—12—83 செவ்வாய், சடைய நாயனர் குருபூசை.

21—12—83 புதன், அதிகாலை ஸ்ரீ நடராசர் அபிடேகம். ஆருத்திரா தரிசனம். சீகாழியில் ஸ்ரீ உமாமகேசுவரருக்கு உச்சிக் காலத்தில் புழுக்காப்பு. ஐயாற்றில் ஸ்ரீ ஆட்கொண்டாருக்கு வடைமாலைக் காட்சி.

22—12—83 வியாழன், தருமை இரண்டாவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ ஆனந்தபரவச தேசிக சுவாமிகள் குருபூசை.

23—12—83 வெள்ளி, சங்கடஹரசதுர்த்தி. ஆயில்யவிழா.

26—12—83 திங்கள், காளாஷ்டமி-காலபைரவாஷ்டமி. இயற்பகை நாயனர் குருபூசை.

29—12—83 வியாழன், கர்ப்போட்ட ஆரம்பம்20-55, மானக்கஞ்சாற நாயனர் குருபூசை

31—12—83 சனி, மகாப்பிரதோஷம்.

1— 1—84 ஞாயிறு. மாத சிவராத்திரி.

2— 1—84 திங்கள், சர்வ அமாவாசை.

3— 1—84 செவ்வாய், ஹனுமத்ஜயந்தி. சாக்கியநாயனர் குருபூசை

8— 1—84 ஞாயிறு, தனுர்வயதீபம்.

10— 1—84 செவ்வாய், திருக்கடவூர் ஸ்ரீ முனிசுவரபூசை.

11— 1—84 புதன், கூடாரைவெல்லி. கர்ப்போட்ட நிவிருத்தி 22-57. வாயிலார் நாயனர் குருபூசை.

13— 1—84 வெள்ளி, தருமை பதினெனருவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சச்சிதானந்த தேசிக சுவாமிகள் குருபூசை.

14— 1—84 சனி. வேளூர்க்கிருத்திகை. தருமையில் ஸ்ரீசண்முகருக்கு கிருத்திகை அபிடேகம். விரதம். சர்வ வைகுண்ட ஏகாதசி. போகிப்பண்டிகை. மகரரவி 38-54.



**சிவபெருமான் சந்நிதானத்தில் திருநந்திதேவர்**
**விண்ணப்பஞ்செய்தருளிய**

# பதினாறு பேறு

1. மறைக ணிந்தனை சைவநிந் தனைபொரு மனமும்[1]
தறுக ணைம்புலன் களுக்கேவல் செய்யுருச் சதுநம்[2]
பிறவி தீதெனப் பேதையர் தம்மொடு பிணக்கும்[3]
உறுதி நல்லறஞ் செய்பவர் தங்களோ டுறவும்[4]

2. யாது நல்லன்பர் கேட்கினு முதவுறு மியல்பும்[5]
மாத வத்தினோ ரொறுப்பினும் வணங்கிடு மகிழ்வும்[6]
ஓது நல்லுப தேசமெய் யுறுதியு[7] மன்பர்
தீது செய்யினுஞ் சிவச்செய லெனக்கொளுந் தெளிவும்[8]

3. மனமும் வாக்குநின் னன்பர்பா லொருப்படு செயலும்[9]
கனவி லும்உன தன்பருக் கடிமையாங் கருத்தும்[10]
நினைவில் வேறொரு கடவுளை வழிபடா நிலையும்[11]
புனித நின்புகழ் நாடொறு முரைத்திடும் பொலிவும்[12]

4. தீமை யாம்புறச் சமயங்க ளொழித்திடுந் திறனும்[13]
வாய்மை யாகவே பிறர்பொருள் விழைவுறா வளனும்[14]
ஏமு றும்பர தாரநச் சிடாதநன் னோன்பும்[15]
தூய்மை நெஞ்சின்யா னெனதெனுஞ் செருக்கறுத் துறவும்[16]

5. துறக்கமீ துறையினு நரகிற் றோய்கினும்
இறக்கினும் பிறக்கினு மின்பந் துய்க்கினும்
பிறைக்கொழுந் தணிசடைப் பெரும விவ்வரம்
மறுத்திடா தெனக்குநீ வழங்கல் வேண்டுமால்.

6. துதிவாணி[1] வீரம்[2] விசயம்[3] சந்தானம்[4] துணிவு[5] தனம்[6]
மதி[7] தானியம்[8] சவுபாக்கியம்[9] போகம்[10] அறி[11] வழகு[12]
புதிதாம் பெருமை[13] யறங்[14] குலம்[15] நோயகல் பூண்வயது[16]
பதினாறு பேறுந் தருவாய் மதுரைப் பராபரனே.

— திருவையாற்றுப் புராணம்

Printed & Published by V. Ramaiah Pillai. Manager, Dharmapuram
at the Gnanasambandam Press Dharmapuram, Mayiladuthurai 10-12-83